"WE SHOULD BE WARY WHAT PERSECUTION WE RAISE AGAINST THE LABOURS OF PUBLIC MEN."

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




அன்பேயவன் : அறுவேசக்தி : ஓம் தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : *Aum*

"New Series" ஸத்தியமே ஜேயம்—**SATYAMEVA JAYATE.** "Approved"

புத்தகம். 23.] ராக்ஷஸஹு ஆவணிமீ, 1915ஹு ஆகஸ்டுமீ [சஞ்சிகை 5.

## "WE SHOULD BE WARY WHAT PERSECUTION WE RAISE AGAINST THE LABOURS OF PUBLIC MEN."

### "THE SANCTITY OF A GOOD BOOK."

Books are not absolutely dead things, but do contain a potency of life in them to be as active as that soul was whose progeny they are; nay they do preserve as in a vial the purest efficacy and extraction of that living intellect that bred them. I know they are as lively, and as vigorously productive, as those fabulous Dragon's teeth; and being sown up and down may chance to spring up armed men. And yet, on the other hand, unless wariness be used, as good almost kill a Man as kill a good Book; who kills a Man kills a reasonable creature, God's Image; but he who destroys a good book kills reason itself, kills the Image of God, as it were in the eye. Many a man lives a burden to the Earth; but a good book is the precious life-blood of a master-spirit imbalmed and treasured up on purpose to a life beyond life. 'Tis true, no age can restore a life, whereof perhaps there is no great loss; and *revolutions of ages do not of recover the loss of a rejected truth*, for the want of which whole nations fare the worse. *We should be wary therefore what persecutions we raise against the labours of public men*, how we spill that seasoned life of man preserved and stored up in Books; since we see a kind of homicide may be thus committed, sometimes a martyrdom, and, if it extend to a whole impression, a kind of massacre, whereof the execution ends not in the slaying of an elemental life, but strikes at that ethereal and first essence, the breath of reason itself, slays an immortality rather than a life."—Extract from Milton's *Areopagilica* (taken from the University Selections for the Matriculation Examination of 1915.)

## WORK, FAITH AND HELP:

" We need help from above."—*Sir John Jellicoe*

"LIVE IN 'HOPE', WORK IN 'FAITH' AND REALISE IN 'LOVE."

"Work is of a religious nature :—Work is of a *brave* nature ; which it is the aim of all religion to be." *Every noble work is at first 'impossible.'* But to God's worker,—the labourer in the vineyard—working in Faith, help is ever nigh at hand though it comes *silently* and unperceived as the blessed dew-moisture from the kind Immensities.

"Yes, all manner of help, and pious response from Men or Nature, is always, what we call silent ; cannot speak or come to light, till it be seen, till it be spoken to. Every noble work is at first 'impossible'. In very truth, for every noble work the possibilities will be diffused through immensity; inarticulate, undiscoverable except to **Faith**. Like Gideon thou shalt spread out thy fleece at the door of thy tent ; see whether under the wide arch of Heaven there be any bounteous moisture, or none. The heart and life-purpose shall be as a miraculous Gideon's fleece, spread out in silent appeal to Heaven, and from the kind Immensities, what from the poor unkind Localities and town and country Parishes there never could, blessed dew-moisture to suffice thee shall have fallen."—*Thomas Carlyle.* (Extracted from the *Matriculation* text for 1915.)

We have undertaken to work for children. We have spent a life-time working for them. We were asked in the name of educational authority to pledge ourselves to it by solemn oath and we did it. May the Lord God in whose living Presence on All Saints' Day we pledged our word, give us health and strength to keep it and carry out His work to the Glory of His Name. He knows the secrets of men's heart and judges them aright. We work with unfaltering faith in Him and in the efficacy of His Grace and are content to leave the rest to His Judgment which never fails.

## TRUTH OFTEN UNWELCOME AT FIRST.

The time is racked with birthpangs : every hour
Brings forth some gasping truth, and truth new-born
Looks a misshapen and untimely growth
The terror of the house-hold and its shame
A Monster coiling in its Nurse's lap
That some would strangle, some would starve ;
But still it breathes and passed from hand to hand,
And suckled at a hundred half-clad breasts
Comes slowly to its stature and its form
Calm the rough ridges of its dragon scales,
Changes to shining locks its snaky hair,
And moves transfigured into Angel guise,
Welcomed by all that cursed its hour of birth,
And folded in the same encircling arms
That cast it like a serpent from their home.

OLIVER WENDELL HOLMES.

## ABOU BEN ADHEM AND THE ANGEL.

*Vide 'Transfusion Column ;'*

Abou Ben Adhem (may his tribe increase !)
Awoke one night from a deep dream of peace,
And saw within the moonlight in his room,
Making it rich and like a lily in bloom,
An angel writing in a book of gold.
Exceeding peace had made Ben Adhem bold,
And to the presence in the room he said,
"What writest thou ?" The vision raised its head,
And, with a look made of all sweet accord,
Answered, "The names of those who love the Lord."
"And is mine one ?" said Abou. "Nay, not so,"
Replied the angel. Abou spoke more low,
But cheerily still, and said "I pray thee, then,
Write me as one that loves his fellowmen."
The angel wrote and vanished. The next night,
It came again with a great awakening light,
And showed the names whom love of God had blessed,
And, lo ! Ben Adhem's name led all the rest.

LEIGHT HUNT.

புஸ்தகம்-23.] [சஞ்சிகை-5.

"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."

ராக்ஷஸஸூ ஆவணிமீ

விவேக  சிந்தாமணி

August-September. 1915.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மேனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததேன்னேஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## "THE SANCTITY OF A GOOD BOOK"

"A GOOD BOOK IS THE PRECIOUS LIFE-BLOOD OF A MASTER SPIRIT IMBALMED AND TREASURED UP ON PURPOSE TO A LIFE BEYOND LIFE.'

## "எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்."

"சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம்.
கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்"—ஔவையார்.

"எண்" என்றால் என்ன? எழுத்து என்றால் என்ன? "கண்" என்றால் என்ன? எண்ணும் எழுத்தும் கண்ணாவது எப்படி? குழந்தைகளே! இந்நான்கு கேள்விகளையும் நன்றாக மனதில் வாங்கிக்கொண்டு சிந்தியுங்கள்.

"ஹே! குஞ்சம்மா, இங்கேவா, "எண்" என்றால் என்ன? என்கிற முதல் கேள்விக்கு நீ பதில் சொல்லு, பார்க்கலாம்." உபாத்தியாயரம்மா இப்படிவினவ, பேர்சொல்லிக் கூப்பிட்டு உசாவப்பட்ட குழந்தை எழுந்து "அம்மா, "எண்" என்றால் 'ஒண்ணு', 'இரண்டு' என்று எண்ணுகிற எண்களுக்குப்பேர். மனதில் நினைக்கிற நினைவுக்கும் பேர். 'எண்ணினேன் எண்ணமிது ஸ்வாமி!' என்று ஒருபாட்டுக்கூட இருக்கிறது."—என்றாள்.

உபாத்தியாயர்அம்மா:—சரி, ஒன்று, இரண்டு என்கிற எண்களுக்கும் மனதில் உதிக்கிற எண்ணத்துக்கும் என்ன சம்பந்தமிருக்கிறது என்று பார்ப்போம். அதோ அந்த சின்னக் குழந்தை பட்டம்மாளுக்கு 'ஒன்று' என்று சொல்லிக்கொடு பார்ப்போம்.

குஞ்சம்மா:—அம்மா அக்குழந்தைக்கு இன்னும் 'நான்' என்று நினைக்கத் தெரியவில்லையே! எப்படி ஒன்று, இரண்டு சொல்லிக்கொடுக்கிறது? வயிற்றைப்பசித்தால், "அம்மா, பட்டுக்கு வயத்தைப் பசிக்கிறது" என்று மழலை பேசுகிறதேயொழிய எனக்கு வயிற்றைப் பசிக்கிறது என்று சொல்லத் தெரியவில்லை. 'நான்' என்கிற மூளைகண்ட பின்தான் "நீ" என்கிற பேதம் ஏற்படும். அப்போ 'நான்' ஒண்ணு, 'நீ' இரண்டு, என்று சொல்லிக்காட்டினால் தெரியும், என்று எங்கள் அம்மாள்சொல்லக் கேட்டிருக்கிறேன். அப்படித்தானே அது?

உபாத்தியாயர் அம்மா:—ஆம் அது நிஜம்தான். இப்பொழுது 'எழுத்து' என்றால் என்ன? என்பதற்கு பதில்சொல்லு பார்ப்போம்.

ராஜம்:—அம்மா, நான் சொல்லுகிறேன். அ, ஆ என்று சொல்கிறோமே அதுதான் எழுத்து. அதை எழுதிக் காட்டட்டுமா?

உபாத்தியாயர்அம்மா:—சரி, எழுது பார்ப்போம். எழுதிக்காட்டக் கூடியதாயிருப்பதால்தான் அதற்கு 'எழுத்து' என்று பேர்வந்தது. அப்படியே ஒன்று, இரண்டு என்கிற எண்களும் மனதினால் 'நான்', 'நீ' யென்று எண்ணி அறியக்கூடியதா யிருப்பதால்தான் "எண்" என்று அதற்குப் பேர்வந்தது. எண்ணுக்கு உருவம் மனத்திலும் (அஹத்திலும்), எழுத்துக்கு உரு

வம் புறத்திலும் ஏற்பட்டிருக்கிறது என்பதை நீங்கள் சிந்தித்து மனதில் வைத்துக்கொண்டால், அடுத்த கேள்விக்குப்போகலாம். அது "கண் என்றால் என்ன?" இதற்கு யார் பதில் சொல்கிறீர்கள்?

பாலம்மா:—அம்மா, அம்மா, நான் சொல்கிறேன். இதோ இருக்கே "கண்" (கண்ணைத் தொட்டுக்காட்டி) இதுதான் அது.

உபாத்தியாயர் அம்மா:—"கண்" எத்தனை?

பாலம்மா:—இரண்டு இருக்கிறது.

உபாத்தியாயர் அம்மா:—இரண்டு கண்கள் இருக்கின்றனவே உனக்கு, அவற்றைக்கொண்டு அந்தக்கண்ணால் அந்தப்பக்கமும் இந்தக் கண்ணால் இந்தப் பக்கமும் பார், பார்ப்போம்.

பாலம்மா:—ஏககாலத்தில் இருபக்கமும் பார்க்குமுயன்று முடியாமல், "அது ஏன் அம்மா அப்படி பார்க்க முடியவில்லையே! இரண்டும் ஒரு பக்கமாகவே திரும்பிவிடுகிறதே. இந்தக்கண்ணால் இந்தப்பக்கம் பார்த்தால் மற்றொரு கண்ணும் இந்தப் பக்கமேதான் பார்க்கிறது" என்றாள்.

உபாத்தியாயர் அம்மா:—சரி, அது கண்களினுடைய ஸ்வபாவம். அப்படியென்றால் ஸ்வாமி அப்படியே சிருஷ்டித்திருக்கிறார். ஆதலால்தான் "கண்ணிரண்டும் ஒன்றையே காண்கிறான் பார்" என்று மேலோர் உதாரணம் எடுத்துச்சொன்னார்.

பாலம்மா:—கண் இரண்டிருந்தாலும் ஒன்றையே காண்பதுபோல, எண்ணும் எழுத்தும் இரண்டாயிருந்தாலும் ஒன்றையே காட்ட வேண்டும். அப்படித்தானே யம்மா!

உபாத்தியாயர் அம்மா:—அவசரப்படாதே. அதற்குத்தான் வருகிறேன். எண்ணுக்கு அகத்திலே (மனத்திலே) உருவமும், எழுத்துக்கு புறத்திலே (வெளியிலே) உருவமும் அமைகிறது என்று கண்டு நிச்சயித்துள்ளோமல்லவா? அதைச்சற்று நிதானித்து மனதில் வையுங்கள். இப்போது இன்னொரு அதிசயம் சொல்லப்போகிறேன். அதையும் கேளுங்கள்.

குழந்தைகள்:—அது என்ன, சொல்லுங்கள், கேட்கிறோம்.

உபாத்தியாயர் அம்மா:—கண்ணுக்குத் தோன்றுவதெல்லாம் மனதுக்கும் தோன்றவேண்டும். இல்லாவிட்டால் வெளித்தோற்றம் கண்ணுக்குப் புலப்படாது.

பாலம்மா:—அது எப்படி? விளங்கவில்லையே!

உபாத்தியாயர் அம்மா:—அதோ அந்தக் கறுப்புப்பலகையில் "அ" என்று எழுதியிருக்கிறது பார்த்தையா?

பாலம்மா:—பார்த்தேன். அதைப்போய் தொட்டுக்காட்டவா?

உபாத்தியாயர் அம்மா.—"அதை எழுதிக் காட்டு." பாலம்மா கறுப்புப் பலகையண்டை சென்று "அ" என்கிற எழுத்தை எழுதிவிட்டு வந்து, "அதோ எழுதியிருக்கிறேன், பாருங்கள்" என்றாள்.

உபாத்தியாயர் அம்மா.—"இப்பொழுது அந்தப் பலகையில் 'அ' என்கிற எழுத்து எத்தனையிருக்கிறது?" என்று கேட்டாள்.

குஞ்சம்மாள் குதித்தெழுந்து "இரண்டு இருக்கிறது" என்று இருவிரல்களைக் காட்டிக் கொண்டு பதில்சொன்னாள்.

வாத்தியார் அம்மா.—அது உனக்கு என்னமாகத் தெரிந்தது?

குஞ்சம்மாள்.—"நீங்கள் எழுதியது ஒன்று; பாலம்மாள் எழுதியது ஒன்று; ஆக இரண்டு அதோ இருக்கிறதே, பாருங்கள்" என்றாள்.

"பாலம்மா, அதோ தோட்டக்காரன் வேலை செய்து கொண்டிருக்கிறானே, அவனைக் கூப்பிடு. அவனுக்குத் தெரிகிறதா கேட்போம்" என்று உபாத்தியாயரம்மா சொல்ல, பாலம்மா குதித்தோடிப்போய் தோட்டக்காரன் வீரனை அழைத்தோடி வந்தாள்.

உபாத்தியாரார் அம்மா:—வீராசாமி, அதோ அந்தப் பலகையில் உன் கண்ணுக்கு என்ன தெரிகிறது பார்த்துச்சொல்லு பார்ப்போம். இந்தக்குழந்தைகளெல்லாம் உன்னைக்கேட்க வேண்டுமென்று சொல்கின்றனர்.

வீராசாமி:—எனக்கு எழுதப்படிக்கத் தெரியாதே, என்னவோ இரண்டுகோடு கிறுக்கியிருக்கிறது. அதுதான் தெரிகிறது.

உபாத்தியாயர் அம்மா:—"சரி, நீ போகலாம், போ!" என்று தோட்டக்காரனுக்கு விடை கொடுத்துவிட்டு "குழந்தைகளே, உங்களுக்கு 'அ' என்னும் எழுத்தாகத் தோன்றினது அவனுக்கு வெறும்கோடு மட்டுமாகத் தெரிந்தது. அவன் மனதில் 'அ' என்னும் எழுத்தின் வடிவம் அமைந்திருந்தால் இதைப்பார்த்ததும் அவன் 'அ' வென்று அறிந்துகொள்ளுவான்.

பாலம்மா:—ஆம், அம்மா, எனக்கு முதலிலே எழுத்துப்பாடம் சொன்னபோது இந்த எழுத்தின் வடிவம் மனதில் பிடிபடுகிறது மிகவும் கஷ்டமாயிருந்தது. மனதில் பிடிபட்ட பிறகுதான் எனக்கு 'அ' என்று குறிப்பிட்டுச் சொல்லத் தெரிந்தது.

உபாத்தியாயர் அம்மா:—"நல்லது, இப்பொழுது கறுப்புப்பலகையில் ஒரு தாமரைப்புஷ்பம் வரைகிறேன். தோட்டக்காரனைக் கூப்பிட்டு அது என்னவென்று கேட்டுப்பார்ப்போம்." என்று வெகு அழகான தாமரைப்புஷ்பம் ஒன்று கறுப்புப்பலகையில் வரைந்தாள். தோட்டக்கார வீராசாமியும் அதைப்பார்த்தவுடன் "தாமரைப்பூ" என்று சொல்லிவிட்டான். இந்த உதாரணத்தைக்கொண்டு உபாத்தியாயரம்மா, குழந்தைகளுக்கு வெகுஅழகாய் உபதேசித்ததாவது:—

குழந்தைகளே, கண்ணுக்குத்தோற்றும் ஒவ்வொரு உருவத்துக்கும் அஹத்தில் (மனத்தில்) அதை யொத்த வடிவம் (உருவம்) ஒன்று ஏற்பட்டிருக்கவேண்டும். அப்பொழுதுதான் கண்ணுக்குத்தோற்றினது இன்னது என்று மனதுக்கு அர்த்தமாகும். அர்த்தம் என்றாலும் எண்ணம் என்றாலும் ஒன்றுதான். மனதுக்கு வெளியில் தோன்றும் உருவம் மனத்தினுள்ளேயிருந்தால்தான் அது கண்ணுக்குப்புலப்படும். இல்லாவிட்டால் புலப்படாது. வெளியிலுள்ள பொருள்களைக்காண முகத்திலிரண்டு கண்கள் இருக்கின்றன. அவையிரண்டாயிருந்தும் ஒரே வஸ்துவைக்காண்கின்றன. அதே மாதிரி உள்தோற்றங்களைக்காண அகத்தில் (மனத்தினுள்ளே) இரு கண்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்று "உருவம்" அல்லது "வடிவம்" என்று ஏற்கனவே கண்டுகொண்டிருக்கிறோம். "ரூபம்" என்றாலும் இதற்கே பேர்.

இந்த உருவத்தோடு அதற்கு ஏற்பட்ட பேர் ஒன்றிருந்ததல்லவா? 'அ' எழுத்தை அகரம் என்றும் தாமரைபுஷ்பத்தின் வடிவை தாமரைப்பூவென்றும் சொன்னதுபோல, ஒவ்வொரு வடிவத்துக்கும் ஒருபேர் உண்டு. "நாமம்" என்றாலும் பேர் என்றாலும் ஒன்றே. பேரையெல்லாம் ஒன்று, இரண்டு என்பது போல, நினைத்துத்தான் உணரவேண்டும். அந்தப்பேரின் வடிவம் அல்லது ரூபத்தையெல்லாம் 'அ' என்று எழுதி யுணர்ந்ததுபோலும் தாமரைப்பூவை வரைந்துணர்ந்ததுபோலும், எழுத்தினாலே யுணரவேண்டும். தடாகத்திலுள்ள தாமரைப்பூவும் எழுத்து ரூபமானதே. தண்ணீர்ப் பரப்பாகிய கறுப்புப்பலகையில் இதழ்களின் வடிவமாகிய வரைகள் (கோடுகள்) ஒன்றுசேர்ந்து வர்ணவிசேஷத்தால் அழகு பொருந்திய புஷ்பமாகிறது. அஹத்துருவும், புறத்துருவும் ஒன்றுபட்டாலன்றி காட்சி, அல்லது பார்வை யென்பது ஏற்படாது. இவ்விரண்டும் ஒன்றுபட்டால்தான் கண்படைத்ததற்கு காட்சியுண்டு. இவ்விரண்டும் ஒன்றுபடாவிட்டால் முகத்தில் இரண்டு கண்களிருந்தும் அவை புண்ணுக்குச்சமானமேயாகும். ஏனென்றால் காட்சியேற்படாது. ஆதலால் "எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்" என்று சொன்ன ஔவையார் அஹத்துணர்வும் புறத்துணர்வும் ஒன்றுபட்டுக் காட்சி யென்கிற பார்வை பேற்படுகிறபடியால், அவ்விரண்டுக்கும் அடையாளமும் அறிகுறியுமான எண்ணையும் எழுத்தையும் சுட்டி "எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்' என்று சொன்னார். கண்ணிரண்டும் ஒன்றையே காண்பதுபோல,

அஹத்துணர்வும் புறத்துணர்வும் ஒன்றுபட்டுப் பொருந்தினாலன்றி உண்மையான அறிவு தோன்றுவதில்லை. கண் அறியும் கருவியாதலால், கருவியும் கரணமும் ஒன்றுபட்டாலன்றி அவை சரியாக வேலைசெய்யா; ஆதலால், இரண்டின் உறவை யுணர்த்த கண் இரண்டாயிருந்தும் ஒன்றையே காண்கிற உதாரணத்தைக்கொண்டு அஹம் புறம் எனக் கரணங்கள் இரண்டுபட்டிருப்பினும் அவ்விரண்டும் ஒன்றையே அறிய ஏற்பட்டவையென்பதை ஸ்தூலமாகவும் சூக்ஷ்மமாகவும் விளங்கக்கூறினர்."—என்று சொல்லிப் போதித்துவிட்டு, பின்னும் சொல்கிறார்:—

"இது 'பொருள்பாடம்' சொல்வதில் முக்கியமான அம்சமாதலால், நீங்கள் இந்தஉண்மையை நன்றாக கவனித்து மனதில் வைத்துக் கொள்ளவேண்டும். இங்கே பள்ளிக்கூடத்திலாகட்டும், வெளியிலேயாகட்டும், கண்ணால் பார்த்து, காதால் கேட்டு, மூக்கால் முகர்ந்து, நாக்கால் ருசித்து, தோலால் ஸ்பரிசித்து, அறியும் எதையும் உள்ளத்தில் (அந்தக்கரணத்தில்) ஏற்பட்டிருக்கும் பெரிய பொக்கிஷமாகிய "ஞாபகம்" என்னும் சக்திஸ்தானத்தில் சாவதானமாகவும் ஒழுங்காகவும் சேமித்து வைக்க வேண்டும். இதற்கு 'கவனம்' பரமசாதகம்; சிரவணம் (போதிக்கக்கேட்டல்) சாதனம்.'—என்று குழந்தைகள் மனங்குவிந்து மலரப் பட்சிகள் அடைகாப்பதுபோல் குழந்தைகள் மனத்தைக் கவர்ந்து தாம் சொன்னதெல்லாம் பசுமரத்தாணிபோல் அவர் மனத்திலேறக் குழந்தைகளின் பக்குவமறிந்து அவரவர் மனோபக்குவத்துக்குத் தக்கபடி பலவிதமாக உபமான உபமேயங்களைச் சொல்லியும் சித்தரித்துக்காட்டியும் விளங்கச்செய்தார்.

உபாத்தியாயர் சொல்லக்கேட்டதை சிந்தித்து மனதில் வாங்கிக்கொண்டு அது மனத்தோடு ஏகாக்ரமாகக்கலக்கும்படி அதை இடைவிடாது சிந்திக்கவேண்டும்."—இதுதான் மனப்பாடம் அல்லது சுருக்கமாக "மனனம்" என்று சொல்கிறது என்று தெரிவித்தார்.

சாப்பிட்டசாதம் எப்படி ஜீரணமாய் அன்னப்பால் ரக்தத்தோடு கலந்தால்தான் தேஹத்துக்குத்திடன் உண்டாகிறதோ, அப்படிப் போல, மனதுக்கு உணவுபோலுள்ள "கல்வி" யென்னும் கேள்வியுணர்வு மனத்தோடு ஒன்றுபட்டுக் கலக்கவேண்டும். அப்போதுதான் மனதுக்கு நற்பழக்கம் ஏற்படும். "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்ற ஔவை சொல் பொய்யாகாமல், நாப்பழக்கம், கைப்பழக்கங்களோடு மனப்பழக்கமும் அமையப்பெற்று மனோசங்கல்பத்தினால் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரவேலைகள் மூன்றையும் செய்யும் நிஜமான சக்தியேற்பட்டு, மனோதர்மத்தையுணர்ந்து, அதைக்கொண்டு ஈசுவர சங்கல்பத்தையும், ஈசுவர சிருஷ்டியையும், ஸநாதனமான ஈசுவர தர்மத்தையும் உணர்ந்துய்வது இலகுவாகும். கற்றதனாலான பயன் அப்பொழுதுதான் சித்திக்கும்.

குழந்தைகளே, உங்களுக்காக உழைக்கக்கங்கணங்கட்டி அதற்கென்று தீக்ஷையும் கொடுத்துவிட்ட வித்யா இலாகா தலைவர் வாக்குப் பொய்க்காமலிருக்கக் குழந்தை யொருவனோடு வித்யாசாலை மானேஜர்களான அதிகாரிகளையும் பிரதம வித்யா விசாரகர்களான அதிகாரிகளையும் கண்டுவரப் பிக்ஷாடனர் வேஷங்கொண்டு (வித்யாலக்ஷியமாம்) உயிர்ப்பிச்சை வேண்டி ஊரூராய்ச் சென்று திரிகையில் ஒரு வித்யாதிகாரி வீட்டில் ஸ்ரீவேணுகோபால மூர்த்தி நீலமேகவடிவுஎடுத்து வேணுகானம் செய்துகொண்டு நிற்க, ஆவினம் அவர் பாத பத்மங்களை நாவினால் வருடி, வண்டு தேனுண்டு களிப்பதுபோல தேவரது பூரணஸ்வரூபத்திலிருந்தொழுகும் சிதாநந்த ரஸத்தைப்புசித்துக் கொண்டிருக்கப்பார்த்து அக்காட்சியால் கவரப்பட்ட அடியார் ஒருவர் சத்சங்க விசேஷத்தால் இந்த வுண்மையைக் கிரகித்து இதைப் பாலபாடமாகத்தானே உங்களுக்கும் சொன்னேன்.

இப்படிக்கு,
உங்கள் அன்புள்ள,
வித்யாலக்ஷ்மி உபாத்தியாயர்.

### "EVERY NOBLE WORK IS AT FIRST 'IMPOSSIBLE'."

"WORK, FAITH AND HELP."

"Every noble work is at first 'impossible.' In very truth, for every noble work the possibilities will lie diffused through immensity; inarticulate, undiscoverable except to faith."

"It is true that work and no great reward is the lot of those in this life whose ideals exceed those of their neighbours, and this is really the better part."—An English friend writing on "Oath" and its significance.

"The heart and life-purpose shall be as a miraculous Gideon's fleece, spread out in silent appeal to Heaven: and from the kind Immensities, what from poor unkind Localities and town and country Parishes there never could, blessed dew-moisture to suffice thee shall have fallen."—Heaven's response to the Heart oppressed but is strong in faith and wavers not.

---

### "நல்லகாரியத்திற்கு நாலாயிரம் தடை."

இது ஒரு உண்மையான பழமொழி. நல்ல காரியம் என்றால் என்ன? உலகத்துக்கு நன்மையை அளிக்கும் காரியம். "காரணமின்றிக் காரியமில்லை." ஆதலால், நல்லகாரியத்துக்குக் காரணம் நல்ல எண்ணம். இந்த நல்ல எண்ணம் நல்லுணர்விலிருந்து தான் உதிக்கவேண்டும். நல்லுணர்வு நன்மை தீமையை ஆராய்ந்து தீமையைவிலக்கி நன்மையைக் கிரகிக்கும் விவேக புத்தியாலுண்டாகிறது. இதற்கு ஹம்ஸ பக்ஷியை உதாரணமாகச் சொல்லுவர். அது பாலிலிருந்து நீரைப் பிரித்துப் பாலை மட்டும் பருகும் சக்தி வாய்ந்தது. பாலும் நீரும் போல் உலகத்தில் நன்மையும் தீமையும் கலந்தே யிருக்கிறது. ஹம்ஸ பட்சியைப் போல் விவேக புத்தியுள்ளவன் "குணநாடிக் குற்றமுநாடி மிகைநாடி மிக்கக்கொளல்" தர்மமென்று குணம் குற்றம் இரண்டையும் ஆராய்ந்து இவ்விரண்டும் மிச்ரமாய் (கலந்து) உள்ள உலகத்தில் "மிகைநாடி,"—குணமிகுந்ததை ஆராய்ந்து தேர்ந்து கிரகித்து குற்றமிகுந்ததைத் தள்ளல்வேண்டும். இப்படியாக "நன்மை கடைப்பிடி" யென்றபடி கடைசிவரையில் நன்மையையே 'கடைப்பிடி'யாக முடிவு வரையில் பிடித்து கிரகித்துக்கொண்டுபோனால் உள்ளம் விவேக ஞானத்தால் தெளிவுறும். உள்ளம் தெளியத்தெளிய உள்ளம் உருகி மனதிலுள்ள கள்ளம் கரையும். உள்ளம் உருகுவதாவது பச்சாதாபத்தால் ஜீவகாருணியம் மேலிட்டு பரஹிம்ஸை கூடாதென்று துணிந்து பரோபகார சிந்தையே மேன் மேலும் விருத்தியாகி வருவதால் உண்டாகும் இளக்க நிருதியாம்.

கடினவஸ்து மற்றொன்றுக்குத் தன்னில் இடம் தராது. திரவமான வஸ்துவோ மற்றொன்றுக்கு இடங்கொடுக்கும். கடினமான கல்லில் வேறொன்றுக்கு இடமில்லை, திரவமான தண்ணீரோ கல் முதலான வேறு வஸ்துக்களுக்குத் தன்னில் இடங்கொடுக்கும். அதேமாதிரி கடினமான உள்ளம் உடையார் ஸ்வநயம் ஒன்றையே கருதுவாரன்றி பிறநயம் பாராட்ட மாட்டார். உருகின உள்ளமுடையோர் ஸ்வநயம் பாராட்டாது பிறநயம் பாராட்டுவர். இதற்குத்தான் உள்ளம் உருகுதல் என்று சொல்லுகிறது. 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' என்று வயிறு புடைக்கத்தின்று தனது போக போக்கியங்களிலே மனம் சென்று கல்லாகப் போனவர் காருண்யம் என்பதை யறியார். ஆகையால் பட்டுப் பட்டு அனுபவித்து தன்னைப்போல் பிறரைநினைக்கும் பாவம் உதித்து உள்ளம் உருகக் கள்ளம் கரைந்து கருணைவெள்ளம் கரைபுரள அதில் மூழ்கியுள்ள மனமே பரோபகாரம் செய்யவல்லதாகும். பரோபகாரம் அதிகரிக்க அதிகரிக்க அஹம்பாவம் குறையும். அஹம்பாவம் குறையக்குறைய கர்வமின்மையால் தர்மத்துக்குப் பணிவும் தாழாமற் தாழும் தன்மையும் உண்டாகும்.

தாழாமற் தாழ்வதாவது:—அக்கிரமங்களுக்குத் தாழாமல், தர்மத்துக்குத் தாழ்ந்து நடத்

தல். அக்கிரமம் அசுர பாவனையால் சம்பவிப்பது. தர்மம் தெய்விகசுபாவமானது. தேவாசுர விரோதம் எப்போதும் இருந்துகொண்டேயிருக்கிற படியால், நல்லகாரியத்தை தர்ம விர்த்தியார்த்தம் செய்கிறவர்கள் அசுரபாவமிருந்தவர்களால் மிகவும் இடையூறு செய்யப்பெறுவார்கள். 'ஆயிரம்' என்கிற எண் "மிகை நாடி" யென்னும் சப்தார்த்தத்தை விளக்கும் தொகையாம். அது பிரவிருத்தி முதிர்ச்சியைக் குறிக்கும். மனுஷனுக்குப் பூரணாயுசு நூறு என்று சொல்வதுபோல கர்மத்துக்குப்பூரணத்துவம் ஆயிரத்தில் சம்பவிக்கிறது. "நல்லகாரியத்திற்கு நாலாயிரம் தடை" என்றதனுல் தர்ம விருத்தியை நாடியுழைப்பவர்க்கு நாலா விதத்திலும் அனந்தம் இடையூறுகள் சம்பவிக்கும் என்பது பொருள். நாலுவிதமாவது:—தர்ம, அர்த்த, காம, மோக்ஷம்.

(1) முதலாவது, தர்மவிக்னமாவது என்னவென்றுல் கர்மப்பிரவிருத்தியில் சிலசந்தர்ப்பங்களில் தர்மவழியின்னதென்று உணராது சங்கடப்படுதல். இதற்கு உதாரணம்:-"எருதுக்கு ஏறச்சொன்னுல் கோபம்; முடவனுக்கு இறங்கச்சொன்னுல் கோபம்" என்னும் பழமொழியில் காணலாம்." இந்தப்பழமொழியில் எப்படியும் பொல்லாப்பு சித்திப்பது நிச்சயமாயிருக்கும்பொழுது தர்மத்தையனுசரிக்கும் வழி யின்னதென்று தெரியாமை ஒரு பெரிய சங்கடமென்பதை நன்றுகக் காட்டப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களுக்குத்தான் தர்மசங்கடமென்று சொல்கின்றது. அர்ச்சுனன் யுத்தமுனையில் யுத்த தர்மம் இன்னதென்று தெரியாமல் சங்கடப்பட்டான். அத்தருணம் பார்த்து பகவான் அவனுக்கு கர்மதர்மத்தை உபதேசிக்கக்கருதி அவனது உண்மையான சொரூபத்தையுணர்த்தவேண்டி ஆத்மோபதேசம் செய்து விசுவரூபதரிசனமும் அளித்தார். ஆகையால் தர்ம சங்கடம் அறிவுமயக்கம் ஒழிந்த விடத்திலேயன்றி மற்றப்படி நீங்காது. இதற்கு மூத்தோரிடத்திற் பக்திவிசுவாசம் வேண்டும். மூத்தோர் என்றுல் அறிவிலும் அனுபவத்திலும் முதிர்ந்தோர் என்று அர்த்தம். ஆகையால் தான் "மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்" என்றுர் ஔவையார்.

(2) இரண்டாவது, அர்த்த விக்னம். அப்படியென்றுல் பொருளினுல் வரும் இடையூறு. கர்மம் இனிது முடிய இடம், பொருள், ஏவல் என்னும் மூன்று அங்கங்கள் இன்றியமையாதனவாம். இவை மூன்றும் அர்த்த சம்பந்தமானவையே. ஏனெனில் இவை மூன்றும் பொருளின் ஒருவித சுபாவமெனச் சொல்லலாம். இடம் என்பது சந்தர்ப்ப விசேஷத்தை விளக்கும். இன்ன இடத்தில் இப்படி நடந்து கொள்ளவேண்டுமென்கிற சந்தர்ப்ப ஞானம் இருக்கவேண்டும். அரசனிடத்திலும் அதிகாரிகளிடத்திலும் நடந்துகொள்ள வேண்டிய விதம் வேறு. சம அந்தஸ்துடையவரிடத்து நடந்துகொள்ள வேண்டிய விதம் வேறு. ஏவலாளிகளிடத்தில் நடந்துகொள்ளவேண்டிய விதம் வேறு. இம்மூன்று வகையாகும் பொருள் பேதத்தினுல் அந்தஸ்து பேதமுடையவர்களாதலால் அவர்களிடத்து நடந்து கொள்ள வேண்டியவிதமும் அர்த்த சாஸ்திர சம்பந்தமானதேயாம். இதற்கு சமயோசித சாமர்த்தியமென்று சொல்லுகிறது. கைப்பொருளில்லாமற் காரியம் நடவாது: ஆகையால் அதுவும் வேண்டிய அளவுக்கு இருக்கவேண்டும். ஏவல் செய்வோரின்றிக் காரியம் முடியாது. இதுவும் ஸ்பஷ்டம். இம்மூன்றில் முதலாவது அறிவு சம்பந்தமானது. இரண்டாவது ஞானேந்திரியங்கள் சம்பந்தமானது. மூன்றுவது கர்மேந்திரியங்கள் சம்பந்தமானது. இம்மூன்றின் பூர்ணபக்குவமிருந்தாலன்றி காரியம் இனிது முடியாது.

(3) மூன்றுவது, காம விக்னம். அதாவது கர்மத்தின் உளவு அல்லது தர்ம மறியும் குண

மின்மையால் வரும் இடையூறுகள். அர்ச்சுனனுக்குச் சண்டைபோடுவது க்ஷத்திரியதர்மமாக ஏற்பட்டிருந்தாலும், அதிவீரிய பராக்கிரமமுடையவனுயிருந்தாலும், யுத்தத்தில் கர்மதர்மம் உணர்ந்து மனம் செல்லாமையால் அதில் அவனுக்குச் சுவையேற்படவில்லை. ஆதலால் கைசோர்ந்து, நாவரண்டு, சோகமூர்ச்சையினுல் ஆயுதங்களை நழுவவிட்டுத் தவித்தான். கர்மம் பந்தத்தை விளைக்கக் கூடியதாகையால் கர்மபந்தத்தைக் கண்டு விவேகிகள் மலைத்துச் சோர்வுறுதல் சுபாவமே. ஆனுல் இவ்வுலகம் கர்ம சுபாவம் பொருந்தியதாயிருப்பதாலும் இந்த தேகமே கர்ம வடிவாயிருத்தலாலும், கர்மத்தைச் செய்யாமலிருப்பதும் சாத்தியமில்லை. கர்மத்தைச் செய்யாமலிருக்கவோ முடியவில்லை; செய்தாலும் பந்தம் (கட்டு) ஏற்படுகிறது; இந்த சங்கடத்தில் கர்மத்தில் 'இன்பம்' உணர்வது எப்படி. இதை யுத்தேசித்தே பகவான் "கர்மபலனை ஈசுவரார்ப்பணம் செய்து கர்மத்தைச் செய்: அப்பொழுது கர்ம பந்தம் உன்னைத் தொடராது. கர்ம சுகம் இன்னதென்று தெரியவரும்" என்றுர். ஆகையால் கர்மத்தினுல் துக்கம் வராதிருக்க நிஷ்காம கர்மம் செய்யக்கற்று கர்மவிக்னதத்தை நீக்கல்வேண்டும்.

(4) நான்காவது, மோக்ஷவிக்னம். இது எல்லாவற்றிலும் பெரியதடை யென்பர். ஆனுல் கர்மதர்மத்தை யுணர்ந்தவர்க்கு கர்மம் மோக்ஷவிக்னமாகாது மோக்ஷசாதனமாக அமையும். எப்படியெனில் சொல்வோம். "மோக்ஷம்" என்றுல் என்ன? "விடுபடுதல்" என்று அர்த்தம். எதிலிருந்து விடுபடுதல்? பிறவித்துன்பங்களாகிய பிணி மூப்பு மரணபயம் முதலிய துன்பங்களிலிருந்து விடுபடுதல். ஆனுல் இவைகளெல்லாம் கர்மவசமாய்ச் சனித்ததேஹத்துக்கேயன்றி கர்மாதீதமாய் எங்கும்நிறைந்து எல்லாம் தானுயிருக்கும் பரிபூரணசித்கன சொரூபத்துக்கு இல்லை. இதையறிந்து அனுபவித்து சகஜானுபவம் பெறுவதே மோக்ஷம் அல்லது வீடு. நிஷ்காமியகர்மத்தால் கர்மபந்த பயம் நீங்கினவனுக்கு கர்மத்தால் பேதபாவமுதித்து பேதஞானம் தடிக்கலாமென்கிற பயமன்றி வேறுபயம் இல்லை. அபேதஞானமாகிய அறிவானந்தம் சுககனமாய்த் தடித்து அனுபவஞானம் சகஜமாகி சகஜானந்தத்திலிருப்பவனுக்கு கர்மத்தால் மோக்ஷவிக்னமுண்டாவது எப்படி? உண்டாகாதாகையால் சகஜானுபவஞானத்தால் மோக்ஷவிக்னமும் நீங்கும்.

இப்படி நால் விதத்திலும் சத்கர்மத்துக்கு இடையூருக நேரிடக்கூடிய (அனந்தமான) நாலாயிரம் தடைகளை யறுத்து "நல்லகாரியம்" (சத்கர்மம்) செய்பவன் யாரோ அவனே செய்யவேண்டியதைச் செய்து கிருதார்த்தனுவன். அவனுக்கு உதவிபுரிய வென்று தேவர்களெல்லாம் காத்துக் கொண்டிருக்கிறுர்கள். பகவானே "தில்லை வாழ்ந்தணர்தம் அடியார்க்குமடியேன்" என்று தாம் அடியார்க்கடியனுகவிருக்கும் மஹிமையைத் தெரியப்படுத்தியிருக்கிறுராகையால், அவர் நல்ல காரியம் செய்கிறவர்களுக்குச் சகாயம் செய்வதே தொழிலாகப் பூண்டிருக்கிறுர். ஆதலால் தான் அவருக்கு ஆபத்சகாயன் என்கிறபேர் வந்தது. அப்படிப்பட்டவரால் அடிமைகொள்ளப் பட்டவர்க்கு அடியார்கள் என்று பேர். அப்படியென்றுல் கர்மத்துக்கெல்லாம் ஆதார பூதமாயிருக்கப்பட்டவர்கள் என்று அர்த்தம் கொள்ளவேண்டும். கடவுள் ஒருவரே சுவதந்தரமுடையவர். அதையுணர்ந்து அவர் வழிப்பட்டவர் யாவரேயாயினும் அடியார் என்னப்படவர்.

இப்படிப்பட்டவர்கள் எல்லாச்சாதியினும் எல்லாக்குலத்திலும் வருணுசிரம பேதமின்றி யேற்பட்டிருக்கிறுர்கள். ஒவ்வொருவரும் ஒரு விதத்தில் உலகத்துக்கு உதாரணமாக விருப்ப

வராவர். (Types of Character). இப்படிப்பட்டவர்கள் அறுபத்திமூன்று பேர்கள் உண்டு. இவர்களுக்கு "அறுபத்திமூவர்" என்று பேர். இந்த "அறுபத்திமூவர்" உற்சவம் திருமைலாப்பூரில் விசேஷமாக வருஷந்தோறும் மிக்க வைபவத்தோடு கொண்டாடப்பட்டு வருகிறது. இஃதெல்லாம் சமஷ்டி சேவையார்த்தம் ஜனங்கள் பாலபோதம் பெற்றுக் குழந்தைமனமுடையவர்களாகிக் கள்ளங்கபடு நீங்கி ஹிருதயசுத்தியடைய வேண்டுமென்றேயன்றி வேறல்ல. அப்படிப்பட்ட அதி பரிசுத்தமான தினத்திலே, ஆண்டவனும் அடியார்களும் வெளியிற்போல் எல்லார் உள்ளத்திலும் உறையும் நாளில் பாலர்க்குழைக்கவென்று சத்தியம் வாங்கிப் பத்தியம் கெட்டு நாலாயிரந்தடையிழைத்தால் அதனல் கர்மலோபம் செய்யலாகுமோ. இதை ஈசன் தானே தீர்மானிக்க வேண்டுமென்றி மனிதனல் தீர்மானிக்க முடியாது. ஆகையால் அவன் "குஞ்சித சரணம்" என்னும் திருநாமத்தை, யோதிக்கொண்டு தில்லைவாழந்தணர் வாக்கால் அபயங்கொடுத்து தரிசனமும் அளித்ததை நம்பி அவனிட்டதோர் வேலையைத் தட்டின்றிச் செய்து முடிப்போம். தடையறக்கும் வேலை அவனது. இடையறு துழைப்பதொன்றே நம் கடமையாம் அதை நாம் கர்மலோபமின்றி, ஆண்டானடிமையாகச் செய்து வருவோம். இது நம் ஸத்யானந்த சபாநாயகர் இட்டதோர் கட்டளையாகும். இக்கட்டளை யினிது முடியவேண்டி குஞ்சிதசரண தீக்ஷை பெற்ற 'தில்லைவாழந்தணர்' அவருக்கு நித்தியார்ச்சனைசெய்து வருகிறார். (அர்ச்சனையென்றால் 'உன்பாதமே சரணம்' என்கிற மந்திரத்தைக்கொண்டு பூசித்தல்.) இப்படிப்பட்டவரில் ஒருவரான 'அபூபேன் ஆதம்' சரிதையை ஆங்கிலத்திலிருந்தெடுத்து மொழிபெயர்ப்பு வித்தைக் குதாரணமாகக் கீழே தமிழ்ப்படுத்தி யிருக்கிறோம்.

---

## TRANSFUSION COLUMN. *

["If a combined, honest and sustained effort is made to *transfuse* (not merely *translate*) good English..... into Tamil, the effect will be to assist and stimulate the study of both languages."—Dr. G. U. Pope.]

### மொழிபெயர்ப்பு வித்தை.

(1) "எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்" [Thought and Language are the very eyes (*i. e.*) true expressions of the Soul.]

(2) "விண்ணவனை நண்ணினர்க்கெண்ணமெல்லாம் கண்ணாகும்" [The thoughts of those that have approached *the Light* are all transformed into *Visions bright*".]

---

* "No exercise of faculty is better and nobler for a *real man* than that of struggling with great thoughts and labouring to express them in such a way that they shall reach the heart, instruct the mind, stimulate the best feelings, and elevate the whole being of their fellow men around them!"—Rev. Dr. G. U. Pope on the *Viveka-chintamoni Series.*

## ABOU BEN ADHEM AND THE ANGEL.

## 'அபூ பென் ஆதம்' என்பானும் தேவனும்.

I

"அபூ பென் ஆதம்" என்பான் ஒருசிலன்;
அற்புத பக்தியும் சிரத்தையு முள்ளவனும் :
கற்புடை யவன்சிந்தை ஆனந்த நித்ரையிலே
வெற்பினின் றிழிதெய்வ தேஜஸைக் கண்டது பார் !
தற்பரமானவத் தேவனும் அவன்முன்னே
சிற்பர மானவோர் கிரந்தத்தி லெழுதக்கண்
டற்புத சார்தத்தால் அவனும் மனந்தேறிக்
கற்பித மானவோர் கந்தர்வ னுறவாலே
தற்பர மானவத் தேவனை விளித்தம்மா !
"சிற்பர கிரந்தத்தி லெழுதுவ தென்"னென்றான்.

II

தேஜோமயமான தேவனும் தலைநிமிர்ந் தவனைப்பார்த்து
"தேஜோமயானந்த தேவன்பா லன்புள்ளார் பேரைவரைகிறேன்
"தைஜஸனே" யெனவுகந் துத்தரம் தானளிக்க,—
"தேஜோமயானந்த தேவன்பா லன்புள்ளார் வரிசையில்
"ராஜஸம் நீங்காத நானுமொருவன் ஆவனோ" வென்றான்.
தேஜோமயமான தேவனு "மில்லை"யென் றுரைக்கக்கேட்டு,
தைஜஸ ரூபனும் 'அபூ பென் ஆதமும்' அன்புடனே
"தேஜோமயானந்த தேவனுக் கடிமைநா னில்லையென்றால்
"ராஜஸம் நீக்காநான் என்னுடைத்தமனிதரை நேசிப்பானெனக்குறி
"தேஜோமயமான தேவனே!" யென் றுரை யாடலானான்.

III

அப்படி யாவென்று செப்படி வித்தைபோல்
தப்படி வையாத தேவனும் பதிந்துகொண்
"டெப்படியானாலு மிதையீசற் கறிவிப்பேன் :
"இப்படி யானவன் எப்படியி லுள்ளானோ!
"செப்படி வித்தைபோ லென்னீசன் செய்ஜாலம்
" எப்படி யிருக்குமோ அதையறி வே"னென்றான்.
"அப்படி, இப்படி, ஆனந்தப்படி, எப்படி
"எப்படி யிருந்தா லென் !"னென் றசரீரிவாக்கும்
தப்படி யின்றியே பிறந்த் "அவன் பேரையே
"எப்படி யாலுமென் அன்பரில்முதல்வனா யெழுதுக" வென்றதே.

IV

அப்படியேயத் தேவனு மெழுதியே
இப்படி யாகவே என்னீசன் வரைந்தா
ரெப்படி யாலும்மீ ஈசற்கன்பனே யிதையுணரென்று
தப்படித் தெப்படி யிருந்தாலு முள்ளன்புடையா
ரெப்படி யாலுமென் ஈசற்கடியமர யெனப்பறை யறைந்தான்.
இப்படி யாயுள்ள அற்புதவன்பன் "அபூ பேன் ஆதம்"
எப்படி யாலுமே வற்றப்பெற் றுலகிடை
"அப்படி இப்படி, ஆனந்தப்படி, எப்படி
"எப்படி யிருந்தாலென்! தப்படி யில்லா
"மெய்ப்படி யாமுள் ளன்புடைசித்தமே சிவமென்" றுணர்த்தினன்.

K. S. S. A

---

## SONGS.

## பாட்டுகள்.

### SAILING IN LOVE "OVER THE SEA OF BONDAGES."

### "வாழ்வெனும் ஓடம்"—"பாசக்கடல்"—"நேசப்பாய்."

ராகம்-தோடி; தாளம்-சாப்பு.

பல்லவி.

பாசக்கடல்வழி மோசப்படாவகை
பேசக்கேளாய் மனமே.

அனுபல்லவி.

ஈசனருட்டென்றல் வீசிவரும்போது
நேசப்பாய்தூக்கி விச்வாசத்துழையிட்டுப் (பாசக்—)

சரணங்கள்.

(1) நெஞ்சத்து நேசக்கயிற்றை யிழுத்துக்கொள்
நின்றசைலேதவறாது விழித்துக்கொள்
சஞ்சலப்பந்தித் திரைகள் முறித்துவை
சாருந்துறை செல்லநேரிற் குறித்துவை (பாசக்—)

(2) புந்திச்சுக்கானைப் பிடித்தும் புயலெய்தும்
போததிரைமேற் பொறுமையெண்ணெய் பெய்தும்
வந்திப்பெனுந்திசைகாட்டியைநோக்கி
வாழ்வெனுமோடத்தைத் தாழ்வுடன் போக்கியே (பாசக்—)

## ON UNIVERSAL LOVE.

### "ஜீவகாருண்யம்."

ராகம்-கேதாரகௌளம்; தாளம்-சாப்பு.

பல்லவி.

செல்வத்திலே செல்வம் ஜீவகாருண்ணியம்
தெய்வத்தன்மையிதுவே.

அனுபல்லவி.

கல்வியிற்கல்வி நற்கர்மங்களின் வித்து
கல்வினைப்பேறண்ட நாதன் முடியில் முத்து (செல்வத்திலே—)

சரணங்கள்.

(1) கல்லறம்யாவினும் மிக்க நல்லதிது
நாடும்பதவி யெல்லாம் நல்கவல்லதிது
இல்லற வாழ்க்கையிலின்பந்தருவதிது
இங்குமெங்கு மின்று மென்றும் வருவதிது (செல்வத்திலே—)

(2) மாசற்றவரும் மதிக்கும் பெருமையிது
மக்கள் மனைவியிலும் மிக்க வருமையிது
காசற்றவர்க்குமோர் கற்பகமாமிது
கைப்பொருள் பொய்ப்பொருள் மெய்ப்பொருளாமிது (செல்வத்திலே—)

---

## ON SELF-IMPORTANCE.

### "பெருக்கம்."

ராகம்-கல்யாணி; தாளம்-சாப்பு.

பல்லவி.

இந்தப்பெருக்கம் மனமே நன்றோ—வின்ற
னேற்றமெல்லாந் தடுமாற்றமன்றோ.

அனுபல்லவி.

சொந்தப்பொருளென்று துள்ளித்துடிக்கிறாய்
நந்தம்மிலில்லாத தொந்தம் நடிக்கிறாய் (இந்தப்—)

சரணங்கள்.

(1) எல்லாவுயிரும்போல நீயோருயிரென்றே
எண்ணுகிலாயன்பு நண்ணுகிலாய் சென்றே
பொல்லாரைத் தண்டிக்கப் பொங்கிப் பறக்கிறாய்
பொல்லாங்குணக்கே யுண்டத்தைமறக்கிறாய் (இந்தப்—)

(2) நீயொருபொய் நீவினைப்பதும்பொய்வின்று
நீட்டியுரைப்பதும் பொய் வீலைபொய்யென்று
வாயொரு கோடி பறையினும் நாயின்வால்
வாட்டி நிமிர்த்திலுங் கோட்டந்தீராதபோல் (இந்தப்—)

## THE GRANDEUR OF CREATION.

### சிருஷ்டியின் பெருமை.

சர்வ வல்லமை, சர்வ வியாபகம், சர்வ சக்தி முதலிய விசேஷத்தன்மைகள் அமையப்பெற்றவரும், தனக்கு ஒப்பு உயர்வு ஏதொன்றுமில்லாதவரும், அருள்வடிவருமாகிய கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட வஸ்துக்கள் அனேக விதங்களாயிருக்கின்றன. அணுப்பிரமாணமுள்ள மணல், சிறுகல் முதலியவைகள் முதற்கொண்டு நமது பூமியும், சந்திரனும், சூரியனும் இன்னும் மற்றும் பரந்த ஆகாயவெளியில் சஞ்சாரஞ்செய்துகொண்டிருக்கும் கணக்கில்லாத நக்ஷத்திர கோளங்களும், அவையவைகளின் உபயோகங்களுக்குத் தகுந்தபடி கடவுளால் தீர்மாணிக்கப்பட்டு அவைகளால் நடக்கவேண்டிய காரியங்கள் நடந்தேறிவருகின்றன. நமது பரிச உணர்ச்சியாலன்றி அறிந்துகொள்ளக்கூடாத வாயு ஆகாசமண்டலத்திற் பரவி, மனிதர்களும் தாவரவர்க்கங்களும் ஜீவித்திருப்பதற்கு அத்தியாவசியமான சுவாஸத்திற்கு அனுகூலமாயிருக்கிறது. தன தான்னிய அபிவிர்த்திக்கு மூலகாரணமாகும் மழை, சூரியவெப்பத்தால் ஜலத்தினின்றும் நீராவி ரூபமாய் ஆகாயத்தில் செலுத்தப்பட்டு மறுபடியும் ஜலரூபமாக பூமியில் பொழியுமாறு அகண்ட விஸ்தீரணமுள்ள மகாசமுத்திரம் கரையின்றி இவ்வுலகைச் சுற்றிப் பாவடமிட்டதுபோல் ஆண்டவன் ஆக்கினைக்குள் அடங்கி நிற்கின்றது. ஈ, எறும்பு முதலிய சிறிய ஜீவராசிகள் முதற்கொண்டு பெரிய உருவங்கள் படைக்கப்பெற்ற யானை முதலிய மிருகங்களும், நீரில் வாழும் சுறா, திமிங்கலம் முதலிய பெரிய மீனினங்களும், பகுத்தறிவு, ஞானம், புத்தி முதலிய மேன்மைக் குணங்கள் அமைந்துள்ள மனித ஜீவன்களும் அவையவைகளின் இயற்கைக்கு சாதகமாகும் அவயவங்கள் முதலியன யாதொரு குற்றம் குறைபாடன்னியில் அளிக்கப்பட்டு உலகத்தில் நடமாடுகின்றன. நாம் சாதாரணமாய் நடக்கும்போது நமது கால்களினடியில் அகப்பட்டு நசுங்கிப்போகும் அற்ப சுவரசமுள்ள எறும்புகளின் தேக அமைப்பையும், அவைகள் ஆகாரமுதலியன தேடுவதற்காக அணிவகுத்துச்செல்லும் மாதிரியையும், அவைகள் தங்களுக்குள் இருக்கும் பயம், பசி, முதலிய குறிப்புகளை ஒன்றிற்கொன்று காட்டிக்கொள்வதாய்க்காணும் குறிகளையும் சற்று ஊன்றி யோசித்திடில் கடவுளின் சிருஷ்டியின் பெருமையை அற்பமாய்த் தோன்றும், அவ்வெறும்புகளிடத்தும் பரிபூரணமாய்க்காணலாம். நமது புத்தி யுக்தி யூகங்களால் வண்டி முதலியவைகளை மனிதன் மாடு முதலியவைகளால் இழுக்காமல், மின்சாரத்தினாலும் நீராவியின் வலிமையினாலும் ஓட்டுவிக்கலாம். சமுத்திரத்தில் கப்பலையும் காற்றின்றியோட்டலாம். புகையின் வலிமையால் ஆகாயத்தில் கூடுகட்டிப்பறக்கலாம். ஆயினும், அற்ப ரூபத்துடன் காணும் ஒரு சிற்றெறும்பையேனும் சிருஷ்டித்து அதற்கு ஜீவனளித்து நாம் அதை நடத்த வல்லவர்களோ!

சற்றே நிதானித்து யோசித்தறிந்துகொள்ள வேண்டிய விஷயங்களன்றியில் சாதாரணமாய் நம்மைச் சுற்றி நாற்புறத்திலும் தோன்றும் பலவித காட்சிகளையும் அனேகம் கண்ணுக்கினிய விநோதத் தோற்றங்களையும் காடுகளில் வசிக்கும் சாமானியமான நாகரீகமற்ற பேதை ஜனங்களும் அதிசயித்து அனுபவியாமற் போகார். காலைப்பொழுதிலும் மாலைப்பொழுதிலும் சூரியோதயமாகும்போதும் அஸ்தமனமாகும்போதும் உண்டாகும் தோற்றங்களைக் கண்டு களிக்க ஏழைச்செம்படவர்கள் கும்பல் கும்பலாய் கடலோரங்களில் உட்கார்ந்துகொண்டிருப்பதை பலகாலும் கண்டிருக்கிறோமல்லவா? மற்ற அனேகரும் இக்காட்சிகளைப் பார்த்து ஆனந்திக்க உலாவித்திரிவதைப் பார்த்திருக்கிறோம். சூரியன் உதயமாகுங்காலத்தில் ஒரு பெரிய அழகுற்றதழல் போலும், மாணிக்க வ்டிவம்போலும் விளங்

கிடில் அது யாவர் மனத்தையும் கவருவது அதிசயமோ! செழுஞ்சுடர்விட்டுப் பிரகாசிக்கும் இளஞ்சூரியனுடைய காந்தியால் ஆகாயமெங்கும் பரவி நாற்புரத்திலும் சிதறிநிற்கும் மேகங்கள் பிரகாசமுள்ள செந்நிறங்கொண்டு தோற்றும் காட்சியையும், பச்சை நிறமமைந்த மரங்களும் செடி கொடிகளும், பலவர்ணங்களோடு விளங்கும். மலை முதலிய பிரதேசங்களும் மாறுதல்களையடைந்து, இவைகளென்ன மரகதங்களாலும், மாணிக்கங்களாலும், வயிர வைடூரியங்களாலும் அமைக்கப்பட்டனவோ என மதித்து மயங்குமாறு செய்விக்கும் தோற்றத்தையும் வருணித்து எழுதியுமுடியுமோ! சூரியன் அடிவானத்திலிருந்து மேலே ஏற ஏற நிர்மலமாயும் கண்களால் ஏறெடுத்துப் பார்க்கமுடியாத வண்ணமாயும் தேஜோமயமான வெண்ணிறமடையுமித்தருணத்தில்; ஆகாயத்தில் சற்றுமுன்னர் செந்நிறங்கொண்டிருந்த மேகங்களெல்லாம் உருக்கிவார்த்த வெள்ளியால் அமைக்கப்பட்ட குன்றுகளோவென நினைக்கும்படியாய்த் தோன்றும் அற்புதக் காட்சி மிக விந்தையாயிருக்கும். முந்தின பகலின் சூரிய வெப்பத்தால் வாடி வதங்கித் தலைகுனிந்திருந்த மரங்களின் இலைகளும், செடி கொடிகளும் இரவின் குளிர்ந்த காற்றினால் பின்னும் தலை நிமிர்ந்து பசுமை நிறத்துடன் விளங்குகையில் அவைகளின் பேரில் சூரிய கிரணங்கள் மறுபடி தாக்கவே அனேகம் கோடி சின்னஞ்சிறிய சூரியர்கள் உதித்ததுபோல ஒவ்வொரு இலையிலும் சூரிய பிம்பம் பிரதிபலித்துக் காண்பதை நோக்கவும் நினைக்கவும் வெகு ஆனந்தமாயிருக்கும். பிரகாசமான சூரிய வெளிச்சம் மலைகளினின்றும் இழிந்து வரும் நீரருவிகளின்பேரில் படவே அவை வெள்ளிப்பாளங்கள்போலத் தென்படும். மாலைப்பொழுதில் சூரிய அஸ்தமனவேளையில் சூரியன் அதிகாலையில் இருந்ததுபோல சிவப்பு நிறமாய் ஆகாயமெங்கும் ரம்மியமான செஞ்சுடரொளிவிட்டுப் பிரகாசிக்கும். இச்சமயங்களில் ஆகாயத்தில் சிதறிநிற்கும் மேகங்களில் சிலபாகம் நீல நிறமாகவும், சில பச்சை நிறமாகவும், சில ஊதாவாகவும், சில கருமை கலந்த பச்சை, செம்மை கலந்த கருப்பு முதலிய பலவித வர்ணங்களாகவும் காணும் இவ்வதிசயக் காட்சியின் பெருமையை எழுதியுமுடியாது; பாவலரால் பாடியுமுடியாது; சிற்பியால் சித்திரித்தும் உதவாது! என்ன செய்தபோதிலும் அக்காட்சியின் பெருமையை ஒருவாறுரைத்ததாகுமேயன்றியில், அப்பெருமையை முற்றிலும் உணர்த்தியதாயாகாது. கண்ணாரக்கண்டு களித்தலே முழு ஆனந்தமாகும்.

இரவின் இருட்டை ஒருவாறு ஒழித்து, உலகெல்லாம் தண்ணொளி பரப்பி இன்பமூட்டும் உருக்கிவார்த்த வெள்ளியென்று பிரகாசிக்கும் சந்திரனின் அழகையும், அதைச்சுற்றி புடைசூழ்ந்து நிற்பனவாய்க் காணும் நக்ஷத்திரங்களின் வனப்பையும் என்னென்று சொல்லலாம்! இப்பரந்த உலகத்தைக் கூடாரமிட்டுக் கவிந்ததுபோலக் காணப்படும் ஆகாயவெளியில் கோடானுகோடி வயிரமணிகள் பதிப்பித்ததாகத்தோற்றும் சந்திர நக்ஷத்திரங்களுடைய காட்சியைப் பன்முறை பார்ப்பினும் சலியாது. ஒவ்வொரு முறையும் ஆச்சரியமான தோற்றமாகவிருக்குமே ஒழிய சலிப்படையத்தக்க பழந்தோற்றமாயிராது.

ஒன்றுமறியாச் சிறு குழந்தைகள் அழுந்தருணங்களில், அவர்கள் அழுகையை நிறுத்துதற்பொருட்டு, அவர்களுக்கு வேடிக்கையாய்ச் சந்திரனைக் காட்டுவதும், அதைக் கண்டதும் அவர்கள் அழுதலை நிறுத்தி, 'அம்புலிமானே வா வா' என்றழைப்பதும், அதன் அழகிய உருவத்தைக்கண்டு மகிழ்ந்து தங்களுக்கு அதைப் பிடித்துத்தரவேண்டும் என்னும் குறிப்பாய்க் கைகளைக் காட்டுவதும் முகங்களைக் காட்டுவதும் நாம் அனுபவமா

ய்ப் பார்த்திருக்கிறேமல்லவா! சந்திரனுடைய இதமான வொளியும் வனப்பான வடிவழுமல்லவோ குழந்தைகளின் மனங்களேயும் கூடக் கவர்கின்றது! காடுகளில் வசிக்கும் மிலேச்ச ஜனங்களுமல்லவோ இராத்திரிகளில் நிலவு வெளிச்சத்தில் உண்டு நிமிர்ந்து கூத்துகளாடிப்பாடி ஆனந்தமடைகிறார்கள். நாமும் அடிக்கடி நிலாச்சாப்பாடு சாப்பிடுவதாகச் சொல்லி, உற்றார் உறவினருடன்கூடி மேல்மாடங்களிலோ, நிலவு வீசும் நிலங்களிலோ உட்கார்ந்துகொண்டு பலவித பக்ஷண பதார்த்தங்களுடன் உண்டி அருந்தி, 'இன்றைக்கு நிலவு நன்றாய் அடிக்கின்றது, வானமும் மப்பு மந்தாரமின்றி நிர்மலமாயிருக்கின்றது, நமக்கு நிலாச்சாப்பாடு சாப்பிட ஏற்பட்டநாளே நாள்,' எனப் பலவாறாகச் சந்திரனையும் அதளிக்கும் சுகத்தையும் குறித்துப் பேசிக்களிப்பதில்லையோ! இவைகளெல்லாம் சந்திரனிடத்து விளங்கும் வசீகரமான தன்மைகளால் உண்டாகும் அனுபவங்களென்று தெள்ளெனப் புலப்படும்.

சமுத்திர தீபங்களின் காட்சிகளும் மிகச் சிறந்தவைகளே. சமுத்திரத்தில் உண்டாகும் சிறிய அலைகள் சூரியசாந்தியால் பளபளப்புடன் பிரகாசித்துக்கொண்டு மணற்பாவிய கரைகளை அணுகவணுகப் பெரிய அலைகளாய்த்திரண்டு உருண்டு கரைகளின்பேரில் மோதுவதும், அதனால் தண்ணீர் சிறு திவலைகளாய்ச் சிதறிவிழுவதும், திரும்பவும் தண்ணீர் சமுத்திரத்தில் உள்நோக்கிச் செல்வதுமாகிய காட்சி வெகு நேர்த்தியாயிருக்கும். மீன் பிடிப்பதற்காக ஏழைச்செம்படவர்கள் கடலிற் செலுத்திக்கொண்டுபோகும் கட்டைமரங்களும் சிறு படவுகளும், அலைகளின் வலிமையினால் திடீரென மேலே கிளப்பப்படுவதும் மறுபடியும் குபீரென கீழே தள்ளப்படுவதுமாய் தத்தித்தடுமாறிச் செல்வதைப் பலகாலும் கரையோரங்களில் நின்று பார்க்கிறேமல்லவா! இது அலைகளின் வலிமையைக் குறித்து ஒருவாறு அதிசயிப்பதே. கடலில் கப்பல்கள், பாய்மரங்கள் விரிக்கப்பட்டுச்செல்வதும், புகைக்கப்பல்கள் தங்கள் புகைக் குழல்களினின்றும் புகையைக் கக்கிக்கொண்டுசெல்லும் காட்சியும், வெகு அழகாயிருக்கும். நீலநிறத்தில் ஒன்றிற்கொன்று குறைவிலாதனவாகிய வானமும் கடலும் ஒன்றோடொன்று சேருவதாகக் காணும் அடிவானத்தில் சூரியோதய காலத்திலும் அஸ்தமன காலத்திலும் சூரியன் தண்ணீரிலிருந்து வருவதாகவும், தண்ணீரில் மூழ்கிப்போவதாகவும் காணும் காட்சிகள் மிகச்சிறந்தவை. இதுமாதிரியாகவே சமுத்திரக்கரைகளில் சந்திரோதயம் அதிக ஆனந்தத்தை விளைவிப்பதாகவிருக்கும். சந்திரகாந்தியால் அலைகள், கடல்நீரில் இருக்கும் *நீபாக்கினியின் (Phosphorus) தன்மையால் மின்சாரத்தை யொத்துப் பிரகாசிக்கும் தோற்றம் வெகு அற்புதமாயிருக்கும். சமுத்திர மத்தியில் கப்பலில் நின்று நாற்புறமும் நோக்கிடில், எப்புறமும் கரையே காணாது ஒரே பரப்பாய் நீர்நிலை இருப்பதும், வானம் ஒரு பிரம்மாண்டமாகிய கூடாரமிட்டுக் கவிந்ததுபோல் சுற்றிலு மிறங்கியிருப்பதுமாகிய காட்சி மிக அச்சத்தையும் ஆச்சரியத்தையும் விளைவிக்கத்தக்கது. †தக்ஷிண உத்திர துருவப் பிரதேசங்களில் சமுத்திரங்களில் நீருறைந்து வெகு விஸ்தீரணமுள்ள பளிங்குக் கண்டங்களாகவும், அதிக உயரம் வளர்ந்து பளிங்குக் குன்றுகளாகவும் தோன்றும் தோற்றத்தின் சிறப்பை இவ்விடத்தில் எடுத்துரைத்து மாளாது.

மழைக்காலங்களில் வானமுழுதும் கார் மேகப்படலங்கள் கவிந்து நிற்பதும், அவைகளினடுவே சூரியன் ஒளிமழுங்கிப் பிரகாசிப்பதும், அத்தருணத்தில் ஆகாயத்தில் வில்லையொத்த வளைந்த வடிவமாய் ஊதா, நீலம், இந்திரநீலம், பச்சை, மஞ்சள், ‡செம்பீதம்,

* 'தீயெரி பாஷாணம்' என்றும் சொல்லப்படும்.

†South and North Polar regions ‡ Orange.

சிவப்பு ஆகிய கண்ணுக்கினிய ஏழு வர்ணங்களுடன் காணும் 'இந்திரவில்,' 'இராமர் தனுசு,' என்னும் பெயர்களால் வழங்கிவரும் வானவில் தோன்றி மனோகரமாய்ப் பிரகாசித்து நிற்பதுமாகிய காட்சி வெகு ஆனந்தத்தை யளிக்கும்.

தோப்புகள், சோலைகள், வனங்கள், நதிகள் ஏரிகள் முதலிய இவைகளின் காட்சிகளும் மிக அழகானவைகளே. கமுகஞ்சோலைகளும், தென்னந்தோப்புகளும், இதமான குளிர்ந்த காற்றையும் நிழலையுமளித்து, ஆகாயத்தையளாவியிட்ட மரகதப் பந்தற்போன்று விளங்கும். மா, பலா, நாவல், கொய்யா, முந்திரி, கிச்சிலி, எலுமிச்சை, மாதுளை, வாழை முதலிய பழவர்க்கங்களளிக்கும் மரங்களும் செடிகளும் வளருகின்ற தோப்புகளில், அம் மரங்களின் தளதளத்த இளந்தளிர்களாலும், பச்சையான முதிர்ந்த இலைகளாலும் பலவர்ணங்களுடன் விளங்கும் புஷ்பங்களாலும் காய்கனிகளாலும் கண்களுக்கு இனிய காட்சிகளமைவதோடு, புஷ்பங்களால் நாசிகளுக்கினிய நறுமணம் வீசப்பெறுவோம். தேனருந்தும் பிரமரங்களும் சிறு பூச்சிகளும், புள்ளினங்களும் புஷ்பங்கள்தோறு முட்கார்ந்து இன்னமுதுண்டு களித்துப் பலவித ஸ்வரங்களால் பாடுவதும், நிழல்தரும் மரங்களில் உட்கார்ந்து கோகிலங்கள் இனிய பஞ்சமத்தொனியாய் கூவுவதும், கிளிகள், மைனுக்குருவிகள் முதலிய பட்சிகள் கூட்டங் கூட்டமாக மரங்கள்தோறு முட்கார்ந்து உருசியான கனிகளைத் தின்றுகொண்டே கொஞ்சிக் கொஞ்சி வார்த்தையாடுவதும், அணில்கள் கிளைகிளையாய்த் தாவிக்கொண்டு ஓடும்போது செய்யும் ஸ்ரீங்காரத்தொனியும் காதுகளுக்கினிய கானமாகும்.

மனங்களும் வனப்புள்ள தோற்றங்களில் குறைந்தவையல்ல. ஆகாயத்தையளாவி ஓங்கி வளரும் தேக்கு, கருங்காலி, வேங்கை, வாகை, பாதிரி, கடம்பன் முதலிய வலிவுள்ள மரங்களும், சந்தனம், அகில் முதலிய வாசனையளிக்கும் மரங்களும், சண்பகம், புன்னை, சுரபுன்னை, கொன்றை, மகிழம் முதலிய புஷ்பங்கள் தரும் தாருக்களும், பார்வைக்கு மிக அழகாயிருக்கும். அரசு, அசோகம், ஆலமரம் முதலிய அனேக விருக்ஷங்களும், உயர்ந்து வளரும் மூங்கிற் புதைகளும் வனங்களில் யதேச்சையாய் முளைத்து செழிப்புடன் நிற்பது வெகு கம்பீரமான காட்சியாய்த் தோற்றும் இரவில் நிசப்தமாயிருந்து, பொழுது விடிந்தவுடன் பட்டணங்களில் ஜனங்கள் நித்திரை நீங்கி அவரவர்கள் தொழில்களைச் செய்யப் புகுவதால் உண்டாகும் ஆரவாரத்தைப் போலவே இராப்பொழுதில் அரவமின்றி யிருந்த வனங்களும் சூரியோதயமாகவே பட்டணங்களையொத்து ஜீவிதமாகின்றன. காடை, கவுதாரி, மரக்கொத்தி, செம்போத்து, கிளி, குயில், குருவி, புறு முதலிய அனேகவிதப் பக்ஷிகள் அவைகளின் வாசஸ்தலங்களாகிய மரங்களிலிருந்து புறப்பட்டு இனமினமாய்க் கூடி இறை தேடச்செல்லும். யானைகளும், காட்டெருமைகளும், அதிக அழகுற்ற வடிவங்களடைந்த புள்ளிமான், கொம்புமான், கடம்பைமான் முதலிய மானினங்களும், புல்விளை நிலங்களை நோக்கி மந்தை மந்தையாய் மேய்ச்சலின் பொருட்டு புறப்படும். சிங்கம், புலி, செந்நாய், கோனுய், நரி, முதலிய மாம்சபக்ஷணஞ்செய்யும் மிருகங்கள் இரவை எதிர்பார்த்துப் பகலில் உறங்கிக்கிடக்கும். சுற்றிலும் மரங்களும், செழிப்பாய் வளர்ந்திருக்கும் நீர்நிலைகளில் செந்தாமரை, வெண்தாமரை, அல்லி, ஆம்பல் முதலிய புஷ்பங்கள் புஷ்பித்திருக்க, அன்னம், வனவாத்து, நீர்க்கோழி, கொக்கு முதலிய நீர்வாழும் பக்ஷிகள் நீந்திக்களிக்கும் காட்சி வெகு அழகாயிருக்கும். இருபக்கங்களிலும் கண்களுக்கினிய பசும் புற்றரைகளும், பச்சை வர்ணமதில்கள் எடுப்பித்தனபோன்று காட்டு-மல்லிகை, முல்லை, ரோஜா முதலிய பலவித அழகிய புஷ்பங்கள் மலரும் கொடிகளும் செடிகளும் இருகரைகளிலும் வெகு அடர்த்

தியாய் செழித்துக்கொழுத்து வளர்ந்திருக்கும் நதிகளில், சிறு மணல்களாலும், பருக்கைக்கற்களாலும், பாறைகளாலும் அமைந்த தரையில் நிர்மலமான பளிங்கையொத்த தெள்ளிய தண்ணீர் சலசலப்புச் சத்தத்துடன் ஓட, ஆங்காங்கே யானைக்கூட்டங்களும், மான் மந்தைகளும் நதியிலிருந்து நீரருந்தும் காட்சி மிக ஆனந்தமாயிருக்கும். சூரிய வெளிச்சத்தைக் கண்டு மகிழ்ந்து, மயிற்கூட்டங்கள் தங்கள் நீண்ட பலவர்ணங்கள் நிறைந்த மிக அழகிய தோகைகளை விரித்து ஆனந்தமாய் நிருத்தமிடும்கோலத்தை வருணித்து முடியுமோ! நமது முன்னோர்களாகிய அனேகம் மகா இருஷிகள், நாடுகளிலும் நகரங்களிலும் நாளுக்குநாள் விசேஷமாய் அபிவிர்த்தியாகிவரும் மண்ணாசை, பொருளாசை, பெண்ணாசை முதலிய குறைகளை யொழித்து, அமைதியும் சாந்தமும் முக்கியமாயுள்ள வனங்களின் பெருமைகளை யுணர்ந்தே அவ்விடங்களுக்குச் சென்று நதிக்கரைகளில் பர்ணசாலைகளியற்றிக்கொண்டு, பாபங்களை ஒழித்து, தருமநெறி சார்ந்து பிரம்மஞானிகளாய் வாழ்ந்து வந்தனர்.

மலைகளின் தோற்றங்கள் மிக கம்பீரமானவை. வெகு தூரத்திலிருந்து மலைகளை நோக்கிடில், அவைகள் ஆகாயத்தை யளாவு நீலநிறமாய் ஆகாயத்துடன் கலந்து நிற்கும் காட்சி வெகு அழகாயிருக்கும். மலைகளின் சமீபத்திற் செல்லச்செல்ல அவைகளில் தோன்றும் காட்சிகளின் பெருமை மேன்மேலும் அதிகமாய் விளங்கும். அவைகளில், பசுமையான புல்வகைகளும் செடி கொடிகளும் வளர்ந்திருக்கும் இடங்களும், பச்சைப்பூண்டொன்றுமின்றியில் வெறும் பாறைகளாலமைந்த பாகங்களும், உன்னதமாய் ஓங்கி வளர்ந்திருக்கும் மரங்கள் அடர்த்தியாய் விர்த்தியாயிருக்கும் பிரதேசங்களும், வெண்ணிறமுள்ள மேகங்கள் கவிழ்ந்துகொண்டிருக்கும் சிகரங்களும், தெள்ளிய நீரருவிகள் பாயும் பள்ளத்தாக்குகளும், சூரியகாந்தியில் பல்விதவர்ணங்கள் கொண்டு பிரகாசிக்கும் காட்சி வெகு காம்பீரமானதாயும், அழகானதாயும், கடவுளின் பெருமையை வற்புறுத்துவதாயுமிருக்கும். வனங்களைப்போலவே, இப்பிரதேசங்களிலும், அனேகவித மரங்களும், செடி கொடிகளும், புள்ளினங்களும், விலங்கினங்களும், மிலேச்சர்களான மனிதர்களும் உண்டு.

கடவுளின் சிருஷ்டியில் அமைந்திருக்கும் ஒவ்வொரு பொருளையுங்குறித்துத் தீரவிசாரிப்போமாயின், ஒவ்வொன்றிலும் அவர் பேரறிவும், ஞானம், பெருமையும் தெள்ளென விளங்கும். அற்பமான பூச்சிகள், புழுக்கள் முதலியவைகளின் அமைப்பிலும் அவர் பெருமையைக் காணலாம். கோடானுகோடி சீவராசிகள் உற்பவிப்பதும், மரங்கள், செடிகள் முதலியன சிறு பீஜங்களிலிருந்து மிகவும் பெரியதாய் வளருவதும், பூமியினுட்புறத்தில் பொன், வெள்ளி முதலிய உலோகங்களும், வயிரம், மரகதம், நீலம், இரத்தினம் முதலிய சற்களும் உண்டாவதும், ஆகாயத்தில் கோடானுகோடி கிரககோளங்கள் சஞ்சாரஞ் செய்வதுமாகிய, கடவுளின் அற்புத சிருஷ்டிகளின் பெருமைகளை எடுத்து விரித்துச் சொல்ல இவ்விடத்தில் இடங்கொள்ளாது.

சிருஷ்டியில் காணும் விஷயங்களைச் சிறுவர்களும் சிறுமியர்களும் கவனித்துப் பார்த்துப் பார்த்து அவைகளில் விளங்கும் பெருமைகளை யுணர்ந்து, அவைகளின் உற்பத்திக்குக் காரணமாகும் கடவுளிடத்தில் அழியா அன்பு பூண்டு, அவர் மேன்மையையுணருதற் பொருட்டே இவ்விடத்தில் சிருஷ்டியில், சாமானியமாய் யாவரும் கண்டுகொள்ளக்கூடிய பல காட்சிகளைக் குறிப்பாய் எடுத்துக்காட்டப்பட்டது. இவைகளின் அனுசரணையாய் சிறுவர்கள் தாங்கள் பார்க்கும் யாவற்றையும் வெறுங்கண்களுடன் பார்க்காமல் அவதானித்துப் பார்த்து யோஜித்துக்கேட்டறிந்து இன்னும் மற்றும் சிருஷ்டியின் விசேஷமுள்ள பெருமைகளை உணர்ந்துகொள்வார்களென்னும் எண்ணத்துடன் இந்த அத்தியாயம் எழுதப்பட்டது.

## BIOGRAPHICAL SKETCHES-III.

### MEERA BHAI, THE DEVOUT RANI OF CHITOOR.

சரித்திரமஞ்சரி-3.

### மிராபாய் என்னும் புண்ணியவதியின் சரித்திரம்.

'பிறவிப் பெருங்கட லீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேராதார்.'—குறள்.

I.

நமது இந்தியாவில், 'பஞ்சாப்' தேசத்திற்குத் தெற்காகவும் பம்பாய் இராஜதானியைச் சார்ந்த 'சிந்து' மகாணத்திற்குக் கிழக்காகவும், இராஜபுத்திர அரசர்கள் பல்லோர் அரசாளும், பல சிறிய நாடுகளடங்கிய இராஜஸ்தானம்§ என்னும் தேசமிருக்கிறது. இதில் 'உதயபுரம்' அல்லது 'மீவார்' என்று வழங்கும் ஒரு புராதனமான இராச்சியம் தற்காலத்திலும் சீர் பெற்று விளங்கிக்கொண்டிருக்கிறது. இவ்விராச்சியத்தில் அரசுபுரியும் வேந்தர்கள், இராமாயணத்தின் கதாநாயகராகிய ஸ்ரீ இராமபிரானவதரித்த சூரியவம்சத்தில் பரம்பரையாய் வருபவர்களாகச் சொல்லப்படுவதுடன், மற்ற இராஜபுத்திரவரசர்களிலெல்லாம் மேம்பாடுள்ளவர்களாகவும் மதிக்கப்படுகிறார்கள்.

இம்மாதிரி கீர்த்திபெற்ற உதயபுர இராச்சியத்தில் சற்றேறக்குறைய மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்பாக, ஆக்பர் பாதுஷா டில்லிச் சக்கிரவர்த்தியாய் அரசாண்டகாலத்தில், இராஜநீதி தருமங்களிலும், போர்வலிமையிலும் பேயர்பெற்ற 'மகாராணு' † ஒருவர் அரசாண்டு வந்தார். இவருக்குப்பின்னர் பட்டத்திற்கு உரிமையுடையவனும் இளவரசுப்பட்டம் பெற்றிருந்தவனுமாகிய 'கும்ப சிம்ஹனென்று ஒரு செல்வக்குமாரனிருந்தான். இவனது இன்னுயிர்க்காதலியே இச்சரிதையின் கதாநாயகியாகிய மிராபாய். இவள் இராஜஸ்தானத்திலுள்ள 'நேரதா' (Nerata) என்னும் ஒரு குக்கிராமத்தில் யாவராலும் நன்குமதிக்கப்பட்டிருந்ததோர் நற்குலத்தில் பிறந்தவள். இவள் குலத்திற்குரிய எல்லாவித மேன்மைக்குணங்களும் இவள் சின்னஞ் சிறு பெண்ணாயிருக்கும்போதே இவளிடத்து விளங்கின. 'கண்டவர் மனமுங் கண்ணுங் கவர்ந்திட வனப்பு வாய்ந்த' இவள் உருவின் பேரழகிற்கு இணையாகிய பெண்மணி இராஜஸ்தானமெங்கும் அக்காலத்தில் வேறெவரும் கிடையாது. கல்வி, செல்வம், வீரம், தீரம், நற்குணநற்செய்கை முதலியன அமையப்பெற்றவனும் 'கடிமலர்ப் பகழியேந்துங் காமனு நாணும்' கட்டழகமைந்த உருவத்தையுடையனுமாகிய இளவரசனும், மின்னற்கொடியை யொத்த மிராவும், அன்னமும் பேடும்போல ஒருவரையொருவர் மிகவும் நேசித்து வாழ்ந்து வந்தனர். மிராவும் 'தங்கணயகரிற்றெய்வந்தவம் பிறிதில' வென்பதின் உண்மையை யுணர்ந்தவளாய்த் தனது கணவன் கருத்திற்கிசைந்து நடந்துவந்தாள். மிராவுக்கும் அவள் நாயகனுக்கும் பால்யமுதற்கொண்டே கானம் செய்வதில் அதிகப்பிரியம். அவர்கள் ஒழிந்த நேரங்களையெல்லாம் அரும் பாட்டுகள் இயற்றுவதிலேயும், பாடுவதிலேயும் செலுத்திவந்தார்கள். மிரா இளம்பிராயமுதற்கொண்டே தெய்வபக்தியில் சிறந்தவளாய், கடவுளின் பெருமைகளை யுணர்த்துவதாகிய அனேகம் பாடல்களைத் தனது இனிய குரலால் உள்ளங்கசிந்துருகி ஆனந்த பரவசத்துடன் அடிக்கடி பாடுவது வழக்கம்.

இவ்வாறாகக் காலம் சென்று வருகையில், மூப்புமேலிட்டிருந்த உதயபுரத்து மகாராணுவ

§ Rajaputana.

† மீவார் அரசர்களுக்கு உரித்தாமதோர் பட்டம்.

வர்கள் பரலோகமடைந்தனர். ஆகவே இது, வரையில் தனது உயிர்த்துணைக் காதலியைப் பிரியாது வாழ்ந்துவந்த இளவரசன் அதிக தொல்லையுள்ள இராச்சிய பாரத்தைத் தாங்க வேண்டியதாயிற்று. மீராவோ உதயபுரம் இராணியானவுடன், தெய்வபக்தி மேன்மேலும் அதிகரித்து எப்போதும் கடவுளின் பெருமையின் சிந்தனையிலேயே ஆழ்ந்தவளானாள். இவள் இந்துக்களின் விசேஷமாக வழங்கும் அனேகம் புராண இதிகாசாதிகளையும் நன்றாய் ஆராய்ச்சிசெய்து, அவைகளில் சொல்லியிருக்கும் ஒட்டுவமைச் சரித்திரங்களின் உட்கருத்துக்களாகிய தத்துவ அருத்தங்களைத் தெளிதற வறிந்து, 'அறிவினுக்கறிவாகி யாகந்தமயமான ஆதியை' நேசித்து, நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய் நிறைவாய் நீங்காச்சுத்தமுமாய்' அனந்த கலியாண குணங்களுடன் சுவப்பிரகாசராய் விளங்கும், அருட்பெருஞ்சோதியாகிய கடவுளின் பெருமைகளை அரும்பாக்களில் இசைத்து இனிது பாடிவந்தாள். இவள் பாடிய பாடல்கள், கடவுளிடத்தில் அழியா அன்பு வைத்தாலல்லது அற்பசுகத்தைத் தருவதாகிய இவ்வுலகவாழ்க்கையை யொழித்து என்றும் அழியாத பேரானந்தத்தை விளைவிப்பதாகிய சுவர்க்க சுகத்தைப் பெறுவது அசாத்திய மென்னுங் கருத்தை உணர்த்துகின்றன.

இவள் இராணியானவுடன், இவ்வுலகவின்பத்திற்கு உரித்தான, விலைபெற்ற ஆடைகளும், மணிகளும், பூணாரங்களும், உல்லாசமாயிருந்து பொழுதுபோக்க வசந்த மண்டபங்களும், கண்ணாடி மண்டபங்களும், பளிங்கு மண்டபங்களும், உத்தியான வனங்களும், உண்டுகளிக்க தேவாமிர்தப்போன்ற அதிக உருசிகரமான பலவித உணவுகளும், இன்னும் மற்றும் யாவும், தான் நினைத்தபடி கிடைக்கக்கூடிய சுயேச்சை யடைந்திருந்தபோதிலும், அவைகளிலொன்றையேனும் அவள் வேண்டினவளல்லள். அரசனும் தனது மனைவியினிடமிருந்த பரிபக்குவ தெய்வபக்தியைக் கண்டு வியந்து அவள் மனம் சென்றவழியே விடுத்தான். மீராபாயிடமிருந்த சம்பூரணமான தெய்வபக்தியினாலும், அதனிறுதியாய் உதயமாகிய ஞானநுபவத்தினாலும், உலகவின்பத்தைப் பற்றாது அவள் பேரின்பமளிக்கும் வீட்டையடையும் மார்க்கத்தில் செல்ல வாய்ந்தது. அரசிக்குரிய நல்லாடைகளை யுடுக்கப் பலர் வருந்தியும் அவள் அணிந்தவளில்லை, சாமானிய ஆடையுடுத்தே காலம் கழிப்பாள். தன் அரண்மனை விஷயங்களிலாவது, அல்லது மற்றும் வேறு உலக வியாபாரங்களிலாவது, அவள் கொஞ்சமேனும் தலையிட்டுக்கொண்டவளல்லள். நாள்தோறும் இரவும் பகலுமாய்த்தன் தோழிப்பெண்களுடன் சேர்ந்து அரண்மனையிலாவது, அல்லது அதையடுத்த உத்தியான வனத்திலாவது, கடவுளின் நாம சங்கீர்த்தனங்களை அவள் பாடிப்பாடி ஆனந்தக்கூத்தாடுவது வழக்கம். அவள் இயற்றிய பாடல்களின் சொற்சுவையும், பொருட்சுவையும் மிகச் சிறந்தது; அவளது கண்டத்தின் ஒலியோ கோகிலத்தின் பஞ்சமத்தொனிக்கு இசைந்ததாகவிருந்தது. கருணாரசத்தை விளைவிக்கும் அவள் பாடும் மாதிரியானது, அவளது இருதய கமலத்திலிருந்து அன்புவெள்ளம் பெருக்கெடுக்கச்செய்து, அவள் பாடலைக் கேட்கும் மற்றோர் மனத்தையும் கொள்ளைகொண்டு, அனலிலிட்ட மெழுகுபோலும் உள்ளமுருகச் செய்து, கருணாநிதியாகிய கடவுளிடத்து மெய்யன்பு பூண்டு, ஆனந்தபரவசக்களிப்பையடையச்செய்யும்.

'எழுது சித்திரம்போன் மன்னியிழுமெனு மருவியோதை
முழவொலி சுஞ்சாதம் வலம்புரி முரலுமோசை
கொழுதிசை வண்டின்முரி பெனவிசைக்குணனும் வேரல்
விழுமிலை சிரன்மீன்மேல் வீழ் வீழ்ச்சிபோற் பாடற்
[பண்பும்'

'பொருந்த மந்தரத்திரேடு மத்திமைதாரம் போக்கித்
திருந்திய தள்ளமுங்கன் மெலிவது சிறப்பச்செய்து[கும்
மருந்தன செப்புளோசையிசையோசை வழாமல் யார்க்
விருந்தெனச் செவியின் மாந்தப்பாடினார் வேதகீதர்.'

—(சுவர்முதலியவற்றில் சித்திரக்காரர்) எழுதின சித்திரப்பாவைபோல் அசையாமலிருந்து, இழுமென்று இனிமையாக வொலிகின்ற நீரருவியினது ஓசையும், மத்தளத்தினோசையும், வெண்கலக் கருவியினோசையும், வலம்புரிச் சங்கு ஒலிகின்றவோசையும், மலர்களை மூக்கினால் உழுது பாடுகின்ற வண்டினது குரலுமாகிய இவைபோன்ற இசையினது பண்புகளும், —மூங்கிலினின்று விழுகின்ற இலையினது வீழ்ச்சியும், மீன் கொத்திப்பறவை மீனின் மேல் விழும் விழுச்சியுமாகிய இவைபோல பாடுதலினது குணங்களும், — இசையும்படி, படுத்தலோசையும், சமனோசையும், எடுத்தலோசையுமாகிய இவை மூன்றிலடக்கி, சுத்தமான துள்ளலோசையும், தூங்கலோசையும், மெலிவோசையுமாகிய மூன்றும் சிறந்து நிற்கும்படி செய்து, தேவாமிர்தத்தோடொத்த பாடலினோசையும், பண்ணினதோசையும், ஒன்றோடொன்று மாறுபடாமல் எல்லோர்க்கும் விருந்தினர்க்கிடும் உணவுபோலக் காதுகளினாற்பருகும்படி வேததத்துவார்த்தங்களை யுணர்த்துவதாகிய கீர்த்தனங்களைப் பாடுபவளாகிய மிராபாய் இனிமையான கானம் செய்தனள்.

மிராபாய் பாடும்போதெல்லாம் அவள் சேடிப்பெண்கள் கூடப்பாடியும், அவள் ஆனந்தக்கூத்தாடும்போதெல்லாம் அவர்கள் ஆடியும் மெய்மறந்து பரவசமாவார்கள்.

இப்படியாகக் கொஞ்சகாலம் செல்லுகையில், மிராவுக்கு அரண்மனையினுள்ளே அடைந்து கிடப்பது மிகவும் நிர்ப்பந்தமாகவிருந்தது. மற்றோர் மானிடருக்கும் கடவுளிடத்து அறியா அன்பு பூணுதலாகிய இன்னமுதை யூட்டுவிக்க எண்ணமுற்றோருக்கு, கூட்டிலடைத்த பறவையென்ன, ஓரிடத்திலேயே அடைந்துகிடக்க மனம்வருமோ? மிராபாய் தினந்தோறும் கோவிலுக்குப்போய், அவ்விடத்தில் உபாஸனா மூர்த்தியாய் அமைக்கப்பட்டுள்ள பிம்பத்தின் முன்னின்று, 'உண்ணிறைந்த பேரன்பாலுள்ளுருகி மொழிகுளறி உவகையாகிக் கண்ணிறைந்த புனலுகுப்பக் கரமுகிழ்ப்ப,' கடவுளின் பெருமையை நினைத்து நினைத்து, ஆனந்தக்கூத்தாடுவாள்; தனது தீங்குரலால் இனிமையாய்க் கடவுளின் அருமைப் பெருங்குணங்களைப் புகழ்ந்து பாடுவாள். இவள் பாடுதலைக்கேட்டோரில் இவளிடத்திலும் கடவுளிடத்திலும் அன்புகொள்ளாதாரில்லை. இவள் கோயிலுக்குப்போம்போதெல்லாம் நூற்றுக்கணக்காயும், ஆயிரக்கணக்காயும், ஆடவரும், பெண்டிரும், வயோதிகரும், குழந்தைகளும் இவளைப் பின்பற்றிச்சென்று இன்னமுதாகிய கானத்தை உட்கொண்டு மெய்மறந்து களிப்படைவார்கள். இவ்வாறாக இவள் இருப்பிடம் கோவில்களும் மடங்களுமாயின.

இப்பெண்மணியின் அபூர்வ தெய்வபக்தியின் பெருமை நாடெங்கும் பரவத்தொடங்கிற்று. டில்லிச் சக்கிரவர்த்தியாகிய ஆக்பர் மிராவின் பெருமையையும், அவள் கானத்தின் சிறப்பையும் கேள்வியுற்று, அவளை நேரில் காணவும், அவள் கானத்தைக் கேட்டு மகிழவும் வேண்டுமென்று அதிக ஆவலுற்றான். அக்காலத்தில் சித்தூர் அல்லது மீவார் இராச்சியம் மொகலாயர் ஆட்சிக்கு உட்படாதிருப்பினும், மகாராணா அவனுக்கு அதிக பகைவனல்லாதிருப்பினும், ஒரு இந்து ஸ்திரீயை, அதிலும் ஒரு மகாராணியை நேரில் காண்பது அசாத்தியமான காரியமென்று மயங்கினான். இராஜபுத்திரர்கள் தங்கள் ஸ்திரீகளை அதிக கௌரவமாக நடத்தப்பட்டவர்களென்றும், தங்கள் ஸ்திரீகளுக்கு மானக்குறைவானது ஏதாவது நேரிடும்பக்ஷத்தில், தங்கள் உயிர்களையும் பாராட்டாமல் கொடும்போர் புரிந்தேனும் அவர்களைக் காக்கத் துணிந்தவர்களென்றும், நன்றாக அறிந்தவன். பதின்மூன்றாம் நூற்றாண்டின் கடைசியில், அல்லா உடீன் என்னும்

மகம்மதியவரசன் அரசாக்ஷிசெய்தகாலத்தில் அவன் அக்காலத்துச் சித்தூர் ராணியைப்பார்க்க விரும்பியதால் விளைந்த அனர்த்தங்களையெல்லாம் அறிந்திருந்தான். அப்பொழுது அல்லா உடீன் இராஜஸ்தானத்தின்பேரில் படையெடுத்துச்சென்று, சித்தூரை முற்றுகையிட்டு கொடும்போர் புரிந்தபோது இராஜபுத்திரர் மானங்காக்கவேண்டுமென்றெண்ணி அஞ்சாநெஞ்சராய் ஆண்மையோடு யுத்தம் செய்த சங்கதியும், இராஜபுத்திரர் மகம்மதியர் பெருஞ்சேனையை எதிர்க்கமுடியாதென்று கண்டவுடனே, மீவார் மகாராணியாகிய பத்மினி முதலிய ராஜபத்நிகளும், மற்றும் உயர்குலத்துப் பெண்களும் கற்பைக் காக்கும் பொருட்டு காஷ்டமேறி உயிர் துறந்த சங்கதியும், ஆடவரிலனேகர் கையில் கத்திபிடித்துக்கொண்டு எதிரிகள் கும்பில் புகுந்து தாம் மடியுமட்டும் சண்டைசெய்த சங்கதியும், ஆக்பர் அறிந்திருந்தான். ஆகவே அவன் மிராவை பயிரங்கமாய் நேரில் கண்டு அவள் கானத்தைக் கேட்க யத்தனிப்பானனால் இராஜபுத்திரருக்கும் மகம்மதியருக்கும்பெரிய யுத்தத்தை யுண்டாக்குவதாகுமென்று துணிந்து, தனது முக்கிய பாடகனை வருவித்து தானுமவனுமாக இந்து சந்நியாசிக்குரிய காஷாயவுடைதரித்து, வேற்றுருக்கொண்டு மிராபாய் தினந்தோறும் வந்துபோய்க்கொண்டிருந்த சித்தூர்க்கோவிலிற்குச்சென்று, அங்கேதான் இன்னனென்று யாவரும் அறியாமலே அவளைக்கண்டு, கானத்தையும் கேட்டுவருவதே யுக்தமானதென்று தீர்மானஞ் செய்தான்.

அவ்வாறே அவ்விருவரும் மாறுவேஷமணிந்து ஓர்தினம் சித்தூர் கோவில்வந்து சேர்ந்தார்கள். அவ்விடத்தில் சேடியர் பல்லோர் புடைசூழ்ந்து பரவசமடைந்து நிற்கவும், மற்றோர் மங்கையரும் ஆடவரும் இவளீந்த கானமாகிய இன்னமுதமருந்தி, தேனுண்ட மந்திகளென மயக்குற்று மெய்மறந்து நாற்புறமும் சுற்றி நிற்கவும், அவர்களின் நடுவே மிராபாய் உள்ளமுருகி மெய்யன்புடன் பாடித், 'தன் சேர் கோலத்தின் னெழில்காணச் சதகோடி மின் சேவிக்கமின்னர சென்னும்படி' நின்ற கோலத்தையும் கண்டு, சக்கிரவர்த்தி அதிக வியப்படைந்து, மற்றவரடைந்த மயக்கத்தைத் தானுமடைந்து ஆனந்த பரவசமானன். கல்லினும் கடிய நெஞ்சினர் மனத்தையும் கவர்ந்து, கசிந்துருகச்செய்யும் கருணைரசமுள்ள அவள் கானத்தின் அன்பின் பெருக்கினல், மகம்மதியனுகிய ஆக்பர் மனம் குழைந்துருகி, தன் மதக்கோட்பாடுகளையும் ஒரு க்ஷணம் மறந்து, ஆனந்தமேலிட்டு, மிராபாயின் பாத கமலங்களில் அடியற்றமரம்போலும் விழுந்து, 'கருணைப்பெருக்காகிய பெண்ணரசியே, கடைத்தேறலுற்று மெய்யின்ப வீடாகியபேரின்பமடையக் கடையேனுக்கும் ஓர் வழிபுகட்டாயோ' வென இரந்து வேண்டிக்கொண்டான். உடனே அவன் தன் மத அனுசரணைக்கு மாறுபாடாய் நடந்ததை யுணர்ந்து, தரையை விட்டுமெழுந்து நின்று தன்னுடையில் மறைத்துவைத்திருந்ததோர் விலையேறப்பெற்ற மாணிக்கங்களாலாகிய மாலையை மிராபாயிடம் கொடுத்து, 'யாவராலும் பூஷித்தற்குரிய மங்கையற்கரசியே நாயேன் ஈந்த இவ்வற்ப கொடையாகிய மாலையை நினதன்பிற்கு அன்பாகக்காணும் கடவுளின் பிம்பத்திற்கு அணிவித்து இன்பமுருவாய்,' எனப் பகர்ந்தனன்.

## LIQUID AIR.

## காற்றுத்திராவகம்.

---

நாம் புராணாதிகளிலும் கட்டுக்கதைகளிலும் அனேகவிதமான வித்தைகள் சிலர் செய்ததாக படித்தும் கேட்டுமிருக்கிறோம். மயில்ராவணன், வாலி முதலானவர்களும், சுக்கிரீவன், அனுமார் முதலானவர்களும், பீமஸேனன் அருச்சுனன் முதலானவர்களும் செய்ததாகச் சொல்லியிருக்கும் அற்புதமான செய்கைகளெல்லாம், இந்த நாளில் வாஸ்தவமாக நடக்கும் ஆச்சரியங்களுக்கு முன்னிலையில் அபூர்வமானவைகளல்லனபோல் தோன்றுகின்றன. அசாத்தியமான காரியங்களென்று நினைக்கும் அவைகள் இப்போது சாத்தியமாகி விடுகின்றன. வித்தைகள் செய்வது ஜனங்களை மயக்குவதற்காகவல்ல. அவைகளால் உலகத்திற்கு வெகுவிதமான உபயோகங்கள் கிடைக்கின்றன. ரயில்வண்டியென்ன, தந்தித்தபாலென்ன, இவைகளின் ஆச்சரியத்தை யளவிடக்கூடாதென்றால், சென்னபட்டணத்தில் நெருப்பும் புகையுமில்லாமல்தெருத் தெருவாக வண்டிகள் ஓடிக்கொண்டிருக்கின்றன. தந்தித்தபால் செல்லுவதற்காக, இரும்புக்கம்பங்கள் நாட்டி அவைகள்மேல் கம்பி போகிறது. அந்தக்கம்பியின் வழியாகத்தான் மின்தபால் செல்லுகிறது. ஆயிரம்மயிற்கப்புறம் இருக்கிறவர்களிட மிருந்து சமாசாரம் நிமிஷத்தில் வருகிறது இனிமேல் அந்தக்கம்பமும் வேண்டாம்போலிருக்கிறது: கம்பியும் வேண்டாம் போலிருக்கிறது. 15-வருஷங்களுக்கு முன்னாலே ஐரோப்பாவில் ஒரு வித்வான் கம்பமும் தந்திக் கம்பியுமில்லாமலே, ஒரு ஊரிலிருந்து இன்னொரு ஊருக்கு தந்தி சமாசாரம் அனுப்பலாமென்று சொல்லி அதையும் பண்டிதர்களுக்கு நிரூபணம் செய்து காட்டினார். இப்பொழுது கோட்டை மைதானத்தில் அக்கருவி ஆகாசமளாவி நிற்கிறது. இத்தேசத்திலும் தந்திக்கம்பங்களும், தந்திக் கம்பியும் இல்லாத மின்தபால் சமாசாரம் போய்வரக் காண்கிறோம். இவைகளையெல்லாம்பற்றி இப்போது சொல்ல அவகாசமில்லை. இவைகளைப்போன்ற இன்னொரு ஆச்சரியமான விஷயத்தைப்பற்றிப் பேசுவோம். அதாவது நம்மேல் அடித்து வீசிக்கொண்டிருக்கும் காற்றைத் திராவகமாக இறக்கி யிருக்கிறார்கள். அந்தத் திராவகத்தை வைத்துக்கொண்டு நெருப்பு கரி புகை யொன்றுமில்லாமல் ரயில் கப்பல் இவை ஓட்டலாம் போலிருக்கிறது. அதைப்பற்றிச் சொல்லுவோம்.

காற்றையாவது திராவகமாக இறக்கவாவது! வாயுபகவானை வருணனாகமாற்றி ஜயிலில் போட்டாற்போல சீசாவில் அடைக்கவாவது! இதெல்லாம் நம்ப முடியாததாகவே தோற்றும். ஆனாலும் அவ்வாறு செய்திருக்கிறார்கள். அப்படிச் செய்வது எப்படி சாத்தியமென்று யோசிப்போம். இப்போது கொஞ்சம் தண்ணீரை யெடுத்து அதை அடுப்பில் வைத்துக் காய்ச்சினால், அது ஆவியாகக் கிளம்பிப்போகிறது. இதை நீராவியென்று சொல்லுகிறோம். அந்த நீராவியினால் தான் ரயில்வண்டிகளும் புகைக் கப்பல்களும் ஓடுகின்றன. அந்த நீராவியே கொஞ்சம் குளிர்ந்தால் தண்ணீராக மாறிவிடும். சமையல் செய்வதற்காக அடுப்பில்வைக்கும் பானையின்மேல் மூடியிருக்கும் பாத்திரத்தின் அடியில் நீராவி தங்கியிருக்கும் அந்த மேல்பாத்திரத்தை வெளியில் எடுத்தவுடனே அதிலிருந்து சொட்டுச்சொட்டென்று ஜலம் விழுவதை நாமெல்லாரும் கண்டிருக்கிறோம். அந்த ஜலமானது ஆவியிலிருந்தே யுண்டாகிறது. தண்ணீரைக்காய்ச்சினால் ஆவியாக மாறுகிறது. ஆவிகுளிர்ந்தால் தண்ணீராக மாறுகிறது. சாதாரணமான தண்ணீரைச் செவ்வையாகக் குளிரும்படிச்செய்தால் பனிக்கட்டியாகவுறையும். இங்கிலாந்து முதலான குளிர் தேசங்களில், குளிர்நாளில் தண்ணீர் உறைந்து கட்டியாகும். மழையே கட்டியாகப்பெய்யும். நம்முடைய தேசத்திலேயே இமயமலையின் மேல் தண்ணீர் உறைந்து பாறையாகவே நிற்கும். பாறைபோலிருக்கும் பனிக்கட்டி உரு

கித் தண்ணீராக கங்கை முதலிய ஆறுகளில் பிரவாகிக்கின்றது. அவ்வளவு தூரம் போகாமலே பனிக்கட்டியை - அதாவது தண்ணீர்க் கட்டியை - சென்னபட்டணத்தில் தெருத் தெருவாக விற்கக்காணலாம். ஜலத்தைக் கட்டியாக மாற்ற இயந்திரங்களிருக்கின்றன. அவைகளால் தண்ணீரைப் பாறை பாறையாக உறைத்து ரயில் மார்க்கமாகவும் வெவ்வேறு ஊர்களுக்கு அனுப்புகிறார்கள். ஒரு கட்டியைத் தண்ணீரில் போட்டால் தண்ணீர் ஜில்லென்று போகிறது. இப்பனிக்கட்டி கோடைகாலத்தில் தண்ணீர் ஜிலுஜிலுப்பாயிருக்கிறதற்காகவும் இன்னும் சில காரியங்களுக்கும் உபயோகிக்கப்பட்டுவருகிறது.

இதனால் நமக்கு என்ன விளங்குகிறதென்றால்: தண்ணீரானது, உஷ்ணம் அல்லது குளிர் சேர்ந்தால் வேறுவேறாக உருவம் மாறுமென்பது தெரிகிறது. சாதாரணமாகத் தண்ணீராக விருக்கும்போது திரவமாயிருக்கிறது. அந்தத் தண்ணீரைக் காய்ச்சினால், அது உஷ்ணத்தை ஏற்றுக்கொண்டு, அதனால் உருவம் மாறி ஆவியாகிறது. தண்ணீரைக் குளிரச் செய்தால், அதாவது, அதின் உஷ்ணத்தையெடுத்துவிட்டால், தண்ணீர் பனிக்கட்டியாக உறைந்து கடினமாகிவிடும். நம்முடைய தேசத்தில் தண்ணீரானது ஆறுகளிலும் வாய்க்கால்களிலும் ஓடிக்கொண்டிருப்பதும், குளங்களிலும் கிணறுகளிலும் தங்கியிருப்பதும் நமக்கு சாதாரணமாகத் தெரிந்தகாட்சி. பனிக்கட்டியைப் பார்க்காதவர்களோடு தண்ணீர் சில விடங்களிலும் சிலகாலங்களிலும் கட்டியாயுறைந்துபோகுமென்று சொன்னால் அவர்கள் அதை நம்பமாட்டார்கள். அப்படியே இமயமலையினுச்சியிலேயே வசிக்கும் ஒருவனுக்குத் தண்ணீரே தெரியாது. பாறையாயிருக்கும் பனிக்கட்டி தண்ணீராகிறதென்று சொன்னால் அவன் நம்பமாட்டான். அப்படியே பூமியின்பேரில் மிகவும் அதிக உஷ்ணமான தேசமிருக்கிறதாக நினைப்போம். அதில் உஷ்ணம் அசாத்தியமாயிருந்தால் ஜலம், தண்ணீராக விருக்க முடியாமல் ஆவியாகத்தானேயிருக்கும். இப்போது பூமியில் அப்படிப்பட்ட விடங்களில்லை. பூமி சிருஷ்டிக்கப்பட்டபோது, வெகு வெகு காலங்களுக்கு முன்னாலே பூமியில் தண்ணீரேயில்லாமல், நீராவிதானிருந்ததாகப் பண்டிதர்கள் சொல்லுகிறார்கள். அந்தக்காலத்து மனுஷன் ஒருவன் இருந்தால் அவன் நீராவி தண்ணீராக எப்படி மாறுமென்று கேட்பான். இப்போதும் சூரியமண்டலத்தி லொருவனிருந்தால் அவன் தண்ணீரையே அறியமாட்டான். அவனுக்கு ஆவிதான் தெரியும். அவ்வாறே காற்றை கண்ணுக்குத்தெரியாத ஆவிரூபமாகவே யறிந்திருக்கும் நமக்கு அது ஜலரூபமாக மாறுமென்றால் நம்புவது கஷ்டம். இவ்வாறு பல உருவமடைவது தண்ணீர் மாத்திரமல்ல. நெய், தேங்காயெண்ணெய், இலுப்பையெண்ணெய் இவைபோல்வன குளிர்காலத்தில் கட்டியாகத்தோய்ந்து போகிறதும், கோடைகாலத்தில் உருகுகிறதும் நம்மரெல்லாருக்கும் தெரியும். கட்டியாய் இருக்கிற ஈயத்தை உலையில் வைத்துக் காய்ச்சினால் உருகுகிறது. அப்படி உருகின ஈயத்தை இன்னம் காய்ச்சினால் அது புகை, அதாவது, ஈய ஆவியாகக் கிளம்புகிறது நம்முடைய கருமான் உலையில் கிடைக்கக்கூடிய உஷ்ணத்தினால் அனேக கடினபதார்த்தங்களை உருக்கமுடியாது. இரும்பை உருக்கமுடியாது. கருங்கல்லை உருக்கமுடியாது. அவைகளுக்குத் தகுந்த உஷ்ணம் கொடுத்தால் உருக்கக் கூடும். வெள்ளைக்காரர்கள், இரும்பு கருங்கல் இவைகளைக்காட்டிலும் கடினமாயுள்ள வஸ்துக்களையும் எளிதில் உருக்கும்படியாய்ச்செய்கிறார்கள். காலாக்கினிபோல் எரிக்கும்படியான உலைகளில் உருகாத வஸ்து அனேகமாய் ஒன்றுமில்லை. அவ்வாறே குளிர் உண்டாக்க வேண்டுமானால் பல உபாயங்களாலுண்டாக்குகிறார்கள். குளிரென்று தனியாக ஒன்றுமில்லை. ஒவ்வொருவஸ்துவிலும் உஷ்ணமிருக்கிறது. இரண்டு கல்லை அடுப்பில் போட்டு அதிலொன்றை வெளியில் வைத்து விட்டால் அது மற்றென்றைக் காட்டிலும் குளிர்ச்சியா

யிருக்கிறதாகச் சொல்லுகிறோம். அதாவது, மற்றொன்றைப்போலிருந்த அதின் உஷ்ணம் போய்விட்டது அதனால்தான்குளிர்ந்தது. ஜலத்தில் விரலைவைத்தால் விரல் குளிர்ந்துபோகிறது. ஏனென்றால் குளிர்ந்த ஜலத்தில் உஷ்ணம் விரலைக்காட்டிலும் குறைவானதால் விரலின் உஷ்ணத்தை ஜலம் இழுத்துக்கொள்ளுகிறது. அதனால் அதனுஷ்ணமும் கொஞ்சம் அதிகப்படும்.

பலவிதமாகக் குளிர் உண்டுபண்ணலாம். தண்ணீரில் கொஞ்சம் ஸோடா உப்பைக்கரைத்தால் அது கொஞ்சம் ஜில்லென்றுபோய்விடும் நவச்சார உப்பைக் கரைத்தாலுமப்படியே. இப்படியே வேறு உபாயங்களால் அதிகக் குளிர் உண்டாக்கலாம். பனிக்கட்டியைக் கொஞ்சம உப்போடுகலந்து இடித்தால் பனிக்கட்டியைக் காட்டிலும் ரொம்பக்குளிராகும். இப்படிப்பட்ட குளிரெல்லாம் கையினாலிவ்வளவென்று அறிய முடியாது. கட்டைத்தணலில் கையைவைத்தாலும் கைசுட்டுக் கொப்பளித்துப்போகிறது. பழுக்கக்காய்ந்த கரண்டிக்காம்பில் வைத்தாலுமப்படியேபோகிறது. இவை இரண்டில் எது உஷ்ணம் ஜாஸ்தி எது குறைவு என்று சொல்லுவது முடியாது. அப்படியே குளிரையும் கையினால்பார்த்து அளவிடமுடியாது. இவைகளை அளவிட சில கருவிகளுண்டு. அவைகளால் எளிதிலறியலாம்.

ஈயத்தை உருக்குவதற்கு வேண்டிய உஷ்ணத்தைக்காட்டிலும் இரும்பை உருக்குவதற்கு எப்படிஜாஸ்தியான உஷ்ணம் வேண்டியிருக்கிறதோ அப்படியே வெவ்வேறு ஆவிகளைத் திராவகமாகக் காண்பதற்கு சிலவற்றிற்குக் கொஞ்சமானகுளிரும் சிலவற்றிற்கு அதிகமான குளிரும் வேண்டியிருக்கிறது. நீராவி சுளுவாய்த் தண்ணீராகும். நாம் சுவாசம்விடும் காற்றைத் திராவகப்படுத்த வெகு அதிகமான குளிர் வேண்டும். அதிகமான குளிர் உற்பத்தி செய்யும்விதம் கண்டறிந்ததுமுதல் நவீனதத்துவசாஸ்திரிகள் பற்பல வாயுக்களைத் திராவகமாக இறக்க முயன்றார்கள். பல வருஷங்களுக்கு முன்னாலே நாம் விடும் மூச்சுக்காற்றை திராவகமாக்கினார்கள். அந்த மூச்சுக்காற்றைத்தான் கார்பானிக்வாயு. (Carbonic acid gas) என்று சொல்லுவார்கள். சுண்ணாம்புக்காளவாயில் சுண்ணாம்புக்கல், கிளிஞ்சல் இவைகளைப்போட்டு எரித்தால் அதிலிருந்து கிளம்புகிற வாயுவும் இதுவே. அந்தப்புகையில் நாம் நின்றால் மூச்சுவிட முடியாமல் திக்குமுக்காடிச் செத்துப்போவோம். பெரிய தீவர்த்தி அல்லது எரிபந்தங்களை அந்தப்புகையில் காட்டினாலும் அணைந்துபோய்விடும். அந்தக் காற்றைத் திராவகமாகச்செய்து கெட்டியான கண்ணாடிசீசாவில் அடைத்து பெரிய கட்டடங்களில் தொங்கவிட்டிருப்பதைப் பார்க்கலாம். பார்வைக்குத் தண்ணீரைப்போலே காணப்படுகிறது. ஆனால் தண்ணீரைக்காட்டிலும் இலேசானதாகத் தெரிகிறது. கட்டடங்கள் நெருப்புப்பிடித்துக்கொண்டால் இந்த திராவகக்குப்பிகளை நெருப்பிலெறிந்தால் குப்பிவெடித்து அதிலடங்கியிருந்த திராவகம் கார்பனிக் வாயுவாகமாறி நெருப்பைத்தணிக்கும். கால்சேருள்ள திராவகத்திலிருந்து அசாத்தியமான ஆவி கிளம்பும். அது சுவாலையை அவிக்கும்.

அந்த வாயுவை (Carbonic acid gas) எப்படித் திராவகமாக மாற்றியிருக்கிறார்களென்றால்: முதலாவது, நாம் முன்னே கண்டபடி அதற்குவேண்டிய தகுந்த குளிர் வேண்டும். குளிர்மாத்திரம் போதாது அத்துடன் காற்றைக் கடினமாய் நெருக்கினால் திராவகமாகும். காற்றை எப்படி நெருக்குகிறது? அது கையிலகப்படுமா? என்று கேட்கலாம். கெட்டியான இரும்புப் பாத்திரத்தில் காற்றையடைத்து அதன் மூடி அந்தப்பாத்திரத்தில் நகரக்கூடியதாக விருக்கிறதென்று நினைப்போம். மூடிமேல் இயந்திரத்தினால் அதிக பளுவைத்துத் தாக்கினால், அது நகர்ந்து, பாத்திரத்திற்குள் காற்றிருக்குமிடம் குறையும். சிறுபையன்கள் பாவட்டங்குழாய் என்று வைத்துக்கொண்டு, ஒரு சின்ன மூங்கில் குழாயின் வழியாய் பாவட்டங்

காய், கல்லு, கடுதாசியுண்டை இவைகளைத் துப்பாக்கி மாதிரி விடுகிறதைப் பார்த்திருக்கிறோம். அந்தக் குழாயை நுனியில் விரலால் அடைத்துக்கொண்டு மேல்கொம்பை அழுத்தினால் குழாய்க்குள்ளகப்பட்ட காற்றுத் தன் உருவம்குறைவதைப் பார்க்கலாம். இப்படியே யந்திரமூலமாய் அதிக நெருக்கத்தை உண்டாக்கலாம். காற்றடைக்கப்பட்டிருக்கும் பாத்திரத்தைச் சுற்றி நாம் முன்னே சொன்ன அதிக குளிருண்டாக்கும் பதார்த்தத்தைவைத்தால், உள்ளேயிருக்கும் காற்றுத் திராவகமாக மாறிவிடும். இப்படிச் செய்யக்கூடுமென்று பல வருஷங்களுக்கு முன்னேயே அறிந்திருந்தபோதிலும் அதற்கு வேண்டிய குளிரும் நெருக்கமும் கிட்டாதபடியால், வெகுநாள் வரையில் அப்படிச்செய்ய முடியாமலேயிருந்தது. காற்றைத் திராவகமாக இறக்கமுடியாதென்றே முதலில் நினைத்தார்கள்.

ஆனால் யுக்தியும், வேண்டியசாதக சாதனங்களும் அதிகமாகவே, முன்னாலே திராவகமாக மாற்றமுடியாதென்று நினைத்திருந்த வாயுக்களையெல்லாம் ஒவ்வொன்றாக திராவகமாய் மாற்றிவிட்டார்கள். நாம் சுவாசத்தில் உட்கொள்ளும் (Oxygen) பிராணவாயுவென்று சொல்லும் காற்றை வெகு சிரமப்பட்டு பல வருஷங்களுக்குமுன்னாலே நீராக்கினார்கள். பனிக்கட்டிபோல் சிறு கட்டியாகவும் மாற்றினார்கள். அதற்கு கொஞ்சகாலம் பின்னாலே நம்மைச் சுற்றியிருக்கும் நம்மேல் வீசும் காற்றையும் திரர்வகமாக இறக்கமுடிந்தது. இப்படி திராவகமாக இறக்க ஆதியில் வெகுபணம் சென்றது. ஆகையால் அந்தத் திராவகத்தால் வேடிக்கையைத் தவிர வேறே உபயோகத்தையடைய முடியவில்லை. இப்போது சில வருஷங்களுக்கு முந்தி இந்நூற்றாண்டின் முதலில் ஒரு பெரிய பண்டிதர் அதிகபணமே செலவில்லாமல் காற்றுத்திராவகத்தை குடங்குடமாக இறக்கலாமென்று காட்டியிருக்கிறார். நாம் மேலே கார்பானிக்வாயுவை எப்படி திராவகமாக மாற்றலாமென்றோமோ அப்படியே இதையும் மாற்றலாம். வெகு பலத்தோடு நெருக்கப்பட்ட காற்றைச்சுற்றி அதிக குளிர் உண்டாக்குவதோடு கூட, அடைபட்ட காற்றை மெல்லியகுழாய் வழியாய் வெளியில் செல்லும்படி விட்டால், கொஞ்சம் காற்றுப்போனவுடன், பாக்கியிருக்கிற காற்று தண்ணீராகப்போய்விடும்; இன்னும் கொஞ்சம்போனால் சிறு சிறு கட்டியாகக்கூடமாறும்.

இப்படி சம்பாதித்த காற்றுத்திராவகத்தின் குளிர்ச்சி எவ்வளவென்று அளவிடக்கூடுமாவென்று பார்ப்போம். உஷ்ணத்தையளக்கிறதற்கு சில பரிமாணங்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். துணியளக்க முழத்தைப்போலவும், அரிசியளக்கப் படியைப்போலவும், உஷ்ணத்தை இவ்வளவு 'டிக்ரி' (Degree) என்று சொல்லுவார்கள். இக்காலத்தில் நம்மேலடிக்கும் காற்று 96-டிக்ரி. பனிக்கட்டி 32-டிக்ரி. அதாவது இந்தக் கோடை காலத்திலுள்ள நீரிலிருந்து 64-டிக்ரி உஷ்ணத்தைக் குறைத்தால், அது பனிக்கட்டியாகிவிடும். பனிக்கட்டியின் உஷ்ணத்தை 344-டிக்ரி குறைத்தால் காற்றுத் திராவகத்தின் குளிர்ச்சியின் அளவாகும்! அது எப்படிப்பட்ட குளிர்ச்சியென்று நாம் மனதினால் கூட அளவிடமுடியாது! பனிக்கட்டியைச் சற்றுக் கையில்வைத்துக்கொண்டால், கை தேள்கொட்டுகிறதுபோல் கடுக்கிறது. காற்றுத் திராவகத்தில் விரலைவைத்தால் விரலப்படியே கொப்பளித்துக் கருகிப்போய்விடும். அது பட்ட இடத்தைத்தவிர வேறேயிடங்களில் நின்றுகொண்டு போகாததினால், அதை ரணவயித்தியத்தில் வெகுவாய் உபயோகப்படுத்தக்கூடும். கட்டிச்சிரங்கு, புத்து இவைகளின்மேல் ஒரு பொட்டுத் திராவகம் விட்டால் அவை அப்படியே செத்துக்கருகிப்போய்விடும். ரசத்தின்மேல் கொஞ்சம் திராவகத்தைப்போட்டால், ரசமப்படியே பாறையாக வுறைந்துபோகிறது. அந்த ரசப்பாறையால் கருங்கல்லைக்கூட உடைக்கலாமாம். உலகத்திற்கு இந்த திராவகத்தால் பெரிய உபயோகமுண்டாகலாமென்று தோன்றுகிறது.

இதை இறக்கத்தலைப்பட்டவர் ஒரு வண்டி செய்திருக்கிறார். அது தானாகவே திராவகத்தால் ஓடுகிறது. எப்படியென்றால் கொஞ்சம் திராவகத்தை யடைத்துவைத்தால் அது சுற்றியிருக்கும் காற்றைக் காட்டிலும் வெகு குளிர்ச்சியாயிருப்பதால் பக்கத்திலிருக்கும் உஷ்ணம் தாங்காமல் ஆவியாக வெளியில்கிளம்ப யத்தனித்து வண்டியைத்தள்ளுகிறது. தண்ணீரை அடுப்பில் வைத்துக்காய்ச்சினால் அதிலிருந்துண்டாகும் நீராவி எவ்வாறு வெளிக்கிளம்பிப் போகப்பார்க்கிறதோ அவ்வாறே இதுவும். ஆனால் தண்ணீருக்கு நெருப்புப்போட்டு எரிக்கவேண்டியிருக்கிறது. இதற்கோ நெருப்பே வேண்டியதில்லை. அதைச்சுற்றியிருக்கும் காற்றேபோதும். அது அதற்குப் பெரியநெருப்பு. ரயில்வண்டிகளிலும் புகைக் கப்பல்களிலும் நீராவியை உண்டுபண்ணி அதனால் அவைகளை எப்படி ஓட்டிவைக்கிறார்களோ, அப்படியே காற்றுத் திராவகத்தால் ஓட்டிவைக்கலாமென்று தோன்றுகிறது. அப்படியானால் ரயிலுக்கு நெருப்பு வேண்டியதில்லை; கட்டை, கரியும் வேண்டியதில்லை. இவைகளில்லாமலே ஓடக்கூடுமென்று நினைக்கிறார்கள். இன்னும் ரயில்வண்டிக்கும் புகைக்கப்பல்களுக்கும் போட்டுப் பரீட்சைபார்க்கவில்லை. பார்த்தால் முடியுமென்றே தோன்றுகிறது. ரயிலுக்குக் கரிதான் அதிகச்செலவு. கரியேயில்லாமல் கொஞ்சம் காற்றுத்திராவகத்தைக் கொண்டு ஓடக் கூடியதாயிருந்தால் எவ்வளவு செலவில்லாமலும் அற்புதமாயுமிருக்கும். தந்திக் கம்பங்கள், கம்பிகள், இல்லாமல் தந்தித்தபாலும் நெருப்பு புகை கரியில்லாமல் ரயில் வண்டிகளும் ஒன்றுக்கொன்று ஆச்சரியத்தில் குறைவில்லை. இன்னும் இந்தத்திராவகம் சுலபமாய்க்கிடைக்கும்பட்சத்தில் எப்படிப்பட்ட உஷ்ணமான இடத்தையும் நீலகிரியாக மாற்றிக்கொள்ளலாமென்று தோன்றுகிறது. கடுங்கோடையில் நமக்கு வெப்பம் தாங்கமுடியாமலிருக்கிறது. அப்போது நம்முடையவீட்டில் ஒரு சீசா காற்றுத்திராவகத்தைக்கொணர்ந்து திறந்தால் நீலகிரியைப்போல் வீடு குளிர்ந்து போகும்.

## ARGUING IN A CIRCLE.

## பீஜாங்குர நியாயம்.

பல வருஷங்களுக்கு முன்னே இங்கிலாந்திலேயுள்ள ஒரு சிறுவன் கல்விவிற்பனனாகும்படி பிரான்சுதேசத்துப் பிரதான நகரமாகிய பாரிஸ் பட்டணத்திற்கு அனுப்பப்பட்டான். அந்தச் சிறுவன் தெய்வபக்தியுள்ள தன் தாய் 'தெய்வமிகமேலல்' என்பது முதலாகச் சொல்லிவந்த புத்திமதிகளையெல்லாம் மறந்துவிட்டு, அரைகுறையாகக்கற்ற ஆஸ்திகருடனே விதண்டாவாதஞ்செய்து அதப்படுத்தி நாத்திக விருது பிடிக்கும் சில நாசகாலர்களுடனே கூடித் தன் மதத்தைப் பழிப்பதுடனே 'தெய்வமில்லை' என்றும் சாதிப்பவனாயினன்.

அப்பால் தன்னூரிற்குத் திரும்பிவந்த பிறகு, ஒருநாள் உறவினர் ஒருவருடைய வீட்டிலே இவனைவிருந்துக் கழைத்தார்கள். அந்த வீட்டிலே அன்று அநேகர் விருந்துண்ண வந்திருந்தார்கள்.

வந்தகவர்களெல்லாம் சாப்பாட்டு வேளையாகிறவரையில், சிலர் சொக்கட்டான் ஆடிக்கொண்டும் சிலர் காகிதமாடிக்கொண்டும் சிலர் சதுரங்கம் ஆடிக்கொண்டும் இருக்க, இரண்டு சிறுமியர்கள் ஒரு பலகணித் திண்ணையின் மேல் உட்கார்ந்துகொண்டு படித்திருந்தார்கள். அப்போது பிஞ்சிலே பழுத்த அந்தச் சிறுவன் அந்தப் பெண்பிள்ளைகளின் அருகில் சென்று "வெகுகருத்தாய்ப் படிக்கின்றீர்களே, அதென்ன கதை?" என்று கேட்டான்.

"நாங்கள் படிப்பது கதையுமல்ல கன்ராவியுமல்ல," என்றார்கள்.

"கதையல்லவா? வேறென்ன படிக்கிறீர்கள்" என்று கேட்டான்.

"நாங்கள் பழவடியார்களுடைய வைபவங்களைப் படிக்கிறோம்" என்றார்கள்.

"ஆனல், கடவுள் உண்டென்று நம்புகின்றீர்களோ?" என்று கேட்டான்.

அந்தக் கேள்வி கேட்டதும் அந்த இளங்தைகள் இருவரும் பாவம் அப்படியே அசந்துபோய் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து நின்ருர்கள்.

பின்பு அவர்களில் மூத்தவள் "ஆனல் நீ கடவுள் உண்டென்று நம்பவில்லையோ?" என்ருள்.

அதற்கு அந்தப்பையன் "நான்கூடமுன்னே நம்பிக்கொண்டுதான் இருந்தேன். அப்புறம் பாரிஸ் பட்டணம் போய் தத்துவசாஸ்திரம் படித்த பிறகு கடவுள் என்பது சுத்த சூந்யமான ஒரு வார்த்தை என்று தெளிந்தேன்" என்று சொன்னன்.

அப்போது அந்தப் பாலிகை "அப்பா! நான் பாரிஸ் பட்டணமும் போனதில்லை. தத்துவசாஸ்திரங்களும் படித்ததில்லை. நம்முடைய மதத்தை விளக்கும் வினவிடைஒன்றுமே படித்திருக்கிறேன். ஆயினும் இவ்வளவு தூரம் படித்திருக்கிருய், கடவுள் இல்லையென்றும் சாதிக்கின்றையே. எனக்கு நெடுநாளாய் ஒரு விஷயம் சந்தேகமாய் இருக்கிறது. அதை நிவர்த்தி செய்வது உனக்குக் கஷ்டமல்லவே" என்ருள்.

"அதென்ன சந்தேகம்?" என்று கேட்டான்.

"முட்டைகள் எங்குநின்று உண்டாகின்றன?" என்று கேட்டாள்.

இவர்கள் இப்படி பேசிக்கொண்டிருக்கிறதைக் கண்ட பெரியவர்கள் இந்த மொட்டை தட்டைகள் என்னவோ வாதாடுகின்றதுகளே அதென்ன பார்க்கலாம் என்று கிட்டே வந்தார்கள்.

அப்போது அந்தப் பெண் "அப்பா! நீ கடவுள் இல்லை என்று சாதிக்கிருயே. தயை செய்து முட்டை எங்கிருந்து உண்டாகின்றதென்று எனக்குத்தெரிவி" என்று கேட்டாள்.

"பெட்டைக் கோழி முட்டைஇடும்" என்ருன்.

அதன்மேல் அவள் "நல்லது, கோழி எதிலிருந்து உண்டாகிறது?" என்று கேட்டாள்.

"இது தெரியாதா! கோழி முட்டையிலிருந்து உண்டாகிறது" என்ருன்.

"சரிதான். அவைகளில் முந்தினது எது? முட்டையா? கோழியா?" என்று கேட்டாள்.

"இந்தக் கேள்வி கேட்பதனல் உன்னுடைய கருத்து என்ன? அது கிடக்கட்டும். பெட்டைக் கோழிதான் முந்தினது" என்று சொன்னன்.

"சரி. அப்போது முட்டையிலிருந்து உண்டாகாத முதல் கோழி ஒன்று உண்டல்லவா?" என்று கேட்டாள்.

"பொறு! பொறு! முதலில் இருந்தது முட்டையென்று நான் சொன்னேனல்லவா?" என்ருன்.

"இருக்கட்டும். அப்படியானலும், கோழியிடாத ஒரு முதல் முட்டை இருந்திருக்க வேண்டுமெல்லவா?" என்று கேட்டாள்.

"ஓ! இரு இரு! பொறு பொறு! வந்து நான்-அது என்ன-இதோபார்-நில்லு நில்லு" என்று தலை தடுமாறித் தத்தளித்தான்.

அப்போது அவள் "முட்டைக்கு முன்னே கோழியிருந்தது, அல்லது கோழிக்குமுன்னே முட்டையிருந்தது என்பது உனக்குத் தெரியவில்லை என்று காண்கிறேன்" என்ருள்.

"ஏன்! ஏன்! பெட்டைக் கோழியே முந்தி இருந்தது என்கிறேன்" என்ருன்.

"சரி. நல்லது. அப்படியானல் முட்டையிலிருந்து உண்டாகாத ஒரு கோழி முதலிலிரு

ந்ததல்லவா? மற்ற முட்டைகளுக்கும் கோழிகளுக்கும் பிறப்பிடமாயிருந்த இந்த முதற் கோழியைச் செய்ததார்? சொல்லுவாய்!" என்று கேட்டாள்.

"என்னை என்ன கோழி விற்கிற பையன் என்று நினைத்தாயோ? இந்த முட்டையும் கோழியுந் தானா? வேறொன்றுமில்லையா?" என்று கோபித்துக்கொண்டான்.

"அப்பா! நான் அப்படி நினைத்தவளே அல்ல. எல்லா முட்டைகளுக்கும் கோழிகளுக்கும் மூலாதாரமான முதற்கோழி எப்படி உண்டாயிற்றென்பதை எனக்கு தெரிவிக்கும்படி தானே கேட்டுக்கொள்ளுகிறேன்" என்றாள்.

"அதனாலாவதென்ன?" என்று கேட்டான்.

"உனக்குத் தெரியாததனாலே, நான் சொல்லுகிறேன், கேள். முதல் கோழியைச் சிருஷ்டித்தவர் எவரோ, அல்லது முதல் முட்டையைப் படைத்தவர் எவரோ, அவர்தான் இந்தப் பிரபஞ்சத்தை உண்டாக்கினவர், அவரைத்தான் நாம் கடவுள் என்கிறோம். பீஜாங்குர நியாயமென்று வித்து முற்பட்டதா முளை முற்பட்டதா என வாதித்திருந்தால் முடிவேது? 'வித்தில்லாத சாம்பிரதாயம் மேலுமில்லை கீழுமில்லை' என்பார்கள். சர்வத்துக்கும் முதல் வித்தாயுள்ள அந்த ஆதி மூலத்தை அந்தரத்தில் விட்டுவிட்டால் இந்தப் பிரபஞ்சத்திலுள்ள சராசரங்களுக்கெல்லாம் ஆதிகாரணம் கற்பிக்க வேறுவழியில்லைபல்லவா?" என்றாள்.

அதுகேட்டுப் பிஞ்சிலே பழுத்த அந்தத் தத்துவசாஸ்திரியானவர் வாய் திறவாமல், மௌனமாய்ப் போய் விட்டார்.

## கீர்த்தி.

(சிறுவர்க்கான கதை.)

---

1. ஒரு கிராமத்தில் ஒரு தனவான் இருந்தார். அவர் தம் இளமையிலேயே பாடசாலையிற் கற்றும் கற்றோரிடத்தில் கேட்டும், தமக்கு ஜீவகாலத்தில் மிகவும் பயன்படக் கூடிய சாஸ்திரங்களையும் நீதிகளையும் ஆய்ந்தறிந்தவர். ஊரில் தம் நிலம் முதலிய சொத்துக்களை நன்றாய்ப் பார்வையிட்டு விருத்தியாக்கிப் பெரிய ஐசுவரியத்தைத் தேடினவர். பொருள் தேடுவதின் அருமை தெரிந்தவராதலால், வீண்விரயம் செய்யாமல் பாத்திரமறிந்து கொடுத்து ஔதாரியகுணத்துக்கு உதாரணமாக ஊராரால் எடுத்துச்சொல்லப்பட்டவர். பலவிதமான பேறுகளையும் அடைந்து, யாவருக்கும் நன்மையையே நாடினவராதலின் சுற்று கிராமத்தாரெல்லாரும் இவரை மிக நன்கு மதித்துவந்தார்கள். வெகு தூரதேசத்திலிருந்து வரும் அதிதிகள், அவர் சத்காரியம் செய்பவரென்பதை மற்றோரால் கேட்டு, அவர்பாற்சென்று அவரைமிகவும் வியந்து, தங்களுடைய பெயர் லோகப்பிரசித்தியாகியிருக்கிறது; அதனால் தங்களை நாடி வந்தோமென்று கூறி அவரால் செய்யப்படும் உபசாரங்களை ஏற்றுக்கொண்டு போவது வழக்கமாயிருந்ததுகொண்டு, அவர் தம்முடைய கீர்த்தியைப்பற்றி நினைத்து மகிழ்ந்து நாட்களைக் கழித்து வந்தார்.

2. இப்படி, சில வருஷங்கள் நிகழ்கையில் ஒரு நாள் நமது பெரியவர் ஒரு காரியத்தையிட்டு அடுத்த பட்டணத்துக்குப்போக வேண்டியிருந்தது. வெளியில் பயணம் பண்ணப் போகிறோமென்ற சந்தோஷமும் பல ஊர்களிலும் நமது கீர்த்தி எட்டியிருப்பதால் அங்குள்ளவர்கள் நம்மை விசேஷமாய் கௌரவப்படுத்துவார்கள் என்ற எண்ணமும் அவருக்கு இனி

மையான கனவுகளை உண்டாக்கின. வழியில் தம்மோடு கூடப்போகும் ஜனங்கள் தம்மை மிகவும் துதிப்பதாகவும், பட்டணத்தில் தம் வரவைப் பலர் எதிர்பார்ப்பதாகவும் எண்ணிக் களித்துக்கொண்டேயிருந்தார். புறப்படும் தினத்தில், வண்டி ஏறும் இடத்துக்கு, பந்துக்களும் வேலைக்காரர்களும் பயணம் பண்ணியனுப்ப அவர்களிடம் விடைபெடுத்துக்கொண்டு வண்டியில் தம்மைப்போன்ற பிரயாணிகளோடு ஏறியுட்கார்ந்துகொண்டார்.

3. வண்டி சற்று நேரத்தில் அவ்விடத்தை விட்டுப் பெயர்ந்துசெல்ல ஆரம்பிக்கவும், நமது தனவான் தம்மோடு உட்கார்ந்திருந்த ஜனங்களை ஒவ்வொருவராய்ப்பார்த்தார். ஒருவரும் தமக்குத் தெரிந்தவர்களல்ல. (மிகவும் சாதாரண ஸ்திதியிலுள்ள ஜனங்கள் தானே.) தமக்கு அவர்களைத் தெரியாவிட்டாலும் தம்மை யவர்கள் அறியாமலிருப்பது அவருக்கு அத்தனை ருசிகரமாயில்லை. என்ன! 'அண்டினவரையாதரிக்கும்' தாதா என்று உலகத்தில் பிரக்கியாதி பெற்ற நம்மை இவர்கள் அறியாமல் இருக்கிறார்கள். இவர்களுடைய அறிவின் சிறுமை அதிசயிக்கத்தக்கதே! என்று எண்ணிக்கொண்டிருந்தார். பிறகு வண்டி ஊர் ஊராய் வந்து நிற்கும் பொழுதெல்லாம் ஜனங்கள் ஏறுவதும் இறங்குவதுமாயிருந்தாலும் இவருக்கு அறிமுகத்தையே காணோம். ஒருவேளை, தம்மை நேரில் அறியாவிட்டாலும் தம்முடைய பேர் தமது ஸ்திதி கொடை முதலிய குணங்களைத் தெரிந்து பேசுவாருண்டோ என்று பலர் சம்பாஷணையையும் கவனித்தார். ஒவ்வொருவனும் தன் வீடு வாசல் முதலிய சொந்தவிஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்ததைத் தவிர தம்மைத் துதிப்பவரைச் காணோம். பாதகமில்லை: பட்டணத்துக்குப் போனால் நமக்குத் தெரிந்தவர்கள் பலர் இருப்பார்கள் என்ற எண்ணம் தம்மைத் தாங்கப், பட்டணத்துக்கு வண்டி எப்பொழுது போய்ச்சேருமோ என்று பார்த்துக்கொண்டிருந்தார்.

4. கடைசியாகப் பட்டணத்துக்கு வண்டி வந்து நின்றதும், நமக்குத் தெரிந்தவர்கள் யாராவது வந்திருக்கிறார்களோ என்று ஜன்னல் வழியே பார்த்துக்கொண்டுவந்த நமது ஐயர் கீழே இறங்கினார். ஒருவரும் தம்மையழைத்துக்கொண்டு போகவரவில்லை. கிராமத்தில் யாவராலும் நன்குமதிக்கப்பட்ட நம்மையறிவாரிங்கு காணோமே என்று எண்ணி மனம் நொந்துகொண்டே அவ்விடத்தைவிட்டு வெளியேறினார். ஒரு மூட்டைதூக்கி "எஜமான்களே மூட்டைதூக்க அடியேன் வரட்டுமா" என்று கேட்டான். (கொஞ்சம் மனதில் சந்தோஷம்.) "மூட்டை மிகவும் சிறியது அப்பா நானே கொண்டுபோகிறேன்" என்று ஐயர் இதமாய்ச்சொல்ல அவன் "சீ போ தரித்திரப்பார்ப்பான்" என்று சொல்லிவிட்டுப் போனான். ஐயருடைய மனதும் சிரசும் மிகவும் தாழ்ந்தன. தெருவழியே நடந்து போகையில், ஜனங்கள் நூற்றுக்கணக்காய் அவரவர்கள் காரியங்களைப் பார்த்துக்கொண்டு அதிவேகமாய்ப் போய்க்கொண்டிருப்பதையும், தெரு நிறைய ஜனங்கள் இருந்தும் அவர்களில் ஒருவராவது தம்மை யாரென்றுகூடக் கேட்காததையும், தம் முகத்தை ஏறிட்டுக்கூடப் பார்க்காததையும் நினைத்து நினைத்துப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு சிந்தையில் ஆழ்ந்திருக்கையில், ஒருவண்டிக்காரன், இவர் இந்த ஊருக்குப் புதிதென்பதை குறிப்பினால் உணர்ந்து, எட்டிப்போ ஐயா என்று உரத்துக் கூவிக்கொண்டே இவர் கால் ஓரமாய் வண்டியை ஓட்டி, முகத்திலும் வஸ்திரத்திலும் நிறையத் தூசிவந்தடிக்கும்படி செய்து சிரித்துக்கொண்டு போகவும் நமது பெரியவருக்கு எல்லாம் போதுமென்று ஆய்விட்டது.

5. மிகவும் மனம் சலித்தவராகி, ஒரு விடுதியில் போஜனம்செய்தபின், ஐயர் தன் வஸ்திரத்தைத் திண்ணையில் விரித்து அதன் மேல் படுத்துக்கொண்டு பின்வருமாறு எண்ணமிட்டார். "மனிதனுடைய பெருமை எத்தனை சிறியது. நான் என் மனதில் எவ்வளவோ கீர்த்திமான் என்று எண்ணி மகிழ்ந்திருந்தேனே. நன்மைசெய்தால் உலகம் தலையசைத்து மெச்சுமென்றும், தீமைசெய்தால் முகத்தைச் சுளித்து வெறுக்குமென்றும் எண்ணியிருந்தல்லவோ ஏமாந்தேன். என்னுடைய கீர்த்தியெல்லாம் என் வீட்டிலும் ஊரிலும் தானே. அதற்கு வெளியில் ஒருவரும் என்னைக் கருதுவாரைக்காணேன். என்னுடைய ஸ்திதி மாத்திரமோ இத்தன்மையது. அடுத்த நாட்டிலுள்ள பெரிய மனிதருடைய பெயர் முதலிய அறிபவர் நம்மவரிற் சிலரேயெனின், நம் நாட்டிலுள்ள பெரியோருடைய கீர்த்தி எம்மட்டு? தமிழ் நாட்டை நீக்கிச் சென்றால் அங்கு கம்பராமாயணம் என்னும் பிரபந்தத்தைப்பற்றி யறிந்தவர் சிலர் தாமேயன்றோ? பாடசாலை பரீக்ஷைகளில் மிகவும் சிறப்புடன் தேறினேமென்றும், சர்க்காரிற்பெரிய வேலையிலிருக்கிறோமென்றும்: கோவில் குளம் கண்டோமென்றும், சிறியோர் பெரியோர் யாவரும் விசாரமின்றியன்றோ செருக் கடைகின்றார்கள்? மனிதனுடைய சிறுமை எவ்வளவு வெளிப்படையாகத் தெரிகின்றது. உலகத்தார் சதா என்னையே பார்த்துக்கொண்டிருக்கிறார்கள் என்று எண்ணி நான் தானதர்மம் செய்வதன் பயன் என்ன? ஒருவரிடமும் சொல்லாமல்,நிழலைக் கையால் பிடிக்கிறேனென்று வீண் முயற்சிசெய்வதுபோல், கீர்த்தியென்பதை படையமுயலாமலிருப்பதுவே நலம்" என்று சிந்தித்துக்கொண்டே சற்றுச்கண்ணயர்ந்தார்.

6. அப்பொழுது சந்நியாசிபோலுடை தரித்திருந்த ஒருவர் அவரைப்பார்த்து "அப்பா உன் எண்ணத்தை நான் அறிந்தேன். உன்னைப் போன்றவர்களைத் தேடியலைவதே என்னுடைய தொழில். உன்னிடத்தில் மிகவும் எனக்குப்பிரீதி ஜனிக்கின்றதாதலால் உன்னோடு பேசவிரும்புகிறேன்" என்று மிகவும் இனிய குரலோடு அழைத்து அவர் கையைத் தமது கையிற்கொண்டு கூட்டிச்சென்றார். கொஞ்சதூரம் போனபின், அங்கு நின்ற ஒரு பெரிய தேவாலயம் எதிர்ப்பட சந்நியாசி தம்தோழரை அதனுள்ளே இட்டுக் கொண்டுபோனார். அந்த ஆலயம் மிக விசாலமானது. அதியுன்னதமான அதன் மேற்கட்டு எண்ணிறந்த சித்திரத்தூண்களால் தாங்கப்பட்டது. ஒவ்வொருபாகமும் ஒவ்வொரு மாதிரியாகக் கட்டப்பட்டிருந்தாலும் எல்லாம் ஒன்றுக்கொன்று பொருந்தி விசேஷமான அலங்காரத்தோடு கூடியிருந்தது. ஆனால் முக்கியமாய்க் காணப்பட்ட பகட்டுப் பொருள்கள் யாவெனின் அவ்வாலயத்தின் வெளிச்சத்துக்காக ஏற்றப்பட்டிருந்த பலவிதமான விளக்குகளே. சில இடங்களில் மிகவும் சிறிய விளக்குகள் மினுக்கு மினுக்கென்று எரிந்துகொண்டிருக்கச் சில இடங்களில் மிகவும் அழகான தீபங்களில் தெளிவாய் ஏற்றப்பட்ட வெளிச்சம் காண்போர் கண்ணுக்குக் களிப்புண்டாக்கிக்கொண்டிருந்தது. சில மிகவும் கலங்கியழுக்கடைந்த எண்ணெய் விடப்பட்டதனால் மங்கி எரிய, வேறு சில வாசனை பொருந்திய விலையுயர்ந்த எண்ணெய் ஊற்றப்பெற்று ரமணீயமாய்ஒளிவீசி வெகுதூரம்வரை பிரகாசம்கொடுத்தன. சில தீபங்கள் உயர்ந்த உலோகத்தாலும் சில மண்ணாலும் கல்லாலும் செய்யப்பட்டு இருந்தன. இப்படிப் பலவிதமான விளக்குகள் ஒருங்கே கூடிப்பார்வைக்கு அவலக்ஷணமாகத் தோன்றாமல், திவ்வியமானகாக்ஷியைக் கொடுப்பதைப்பார்த்து வியந்து, ஐயர் சந்நியாசியை நோக்கி, "சுவாமி நான் இதைக்கண்டு அதிசயிக்கிறேன். இங்கு

என்னைக் கொணர்ந்ததில் தங்கள் கருத்து என்ன?" என்று கேட்க அவர் "அப்பா நீ நிதானித்து யோசிப்பதனால் சிறந்த உண்மைகளைக் கற்றுக்கொள்ளுவாய் என்பதே என் கருத்து" என்றார். பிறகு கூர்ந்துபார்க்கையில், விளக்குகள் அணைந்துபோகாமல் இருப்பதற்கும், அடிக்கடி அவைகளைப் பிரகாசிப்பிப்பதற்குப், அநேக உத்தமலக்ஷணமுள்ள ஸ்திரீகள் அங்குமிங்கும் மெல்லென நடந்துகொண்டிருப்பதைக் கண்டார். அவர்கள் எல்லாரும் பார்வைக்கு ஒன்று போலிருந்தாலும் வேறுபோல் நடித்து, ஆங்காங்குச் சென்று விளக்குகளுக்கு வேண்டிய எண்ணெய் வர்த்தி முதலியன இட்டு அணைந்துபோனவிளக்குகள் நீங்க வேறு விளக்குகள் ஏற்றி, ஆலயத்தைத் தங்களுடைய மிக மதுரமான கீதத்தினலும், முகமலர்ச்சியுடன் செய்யும் தங்கள் பணியினலும் அலங்கரித்துக்கொண்டிருப்பதைக் கண்டு ஐயர் சந்நியாசியைப்பார்த்து "ஐயா இதை எனக்கு விளங்கக்கூறவேண்டு" மென்று கேட்டுக்கொண்டார்.

அவர் மிகவும் கருணையுடன் பின்வருமாறு கூறினர்: "இந்த ஆலயம் பல தேசங்களாகிய இவ்வுலகத்தைக் காட்டுகின்றது. இந்த விளக்குகள், செல்வத்தினலும் வர்ணத்தினலும் ரூபத்தினலும் பல வேறு வகைப்பட்ட மன்பதைகளைக் காட்டுகின்றன. இந்த ஸ்திரீகள் பக்தி, சத்தியம் பொறுமை முதலிய நற்குணங்களின் உருவகங்கள். பல விளக்குகளும் சேர்ந்தே ஆலயம் விளங்குவதுபோல் மனிதர்கள் பலதரமானவர்களுடைய நற்குணங்களினல் உலகம் விளங்குகிறது. ஒரு விளக்கின் ஒளி, கொஞ்சதூரம்தானே வீசுகிறது. அவ்விளக்கின் பயன் என்ன என்று ஒவ்வொரு விளக்கையும் அவித்துவிட்டால் அது பேதைமையன்றோ? ஆகையினல், ஒரு மனிதனுடைய நற்செய்கைகள் உலகத்தார் யாவருக்கும் தெரியாவெனினும் தன்னைச் சுற்றியிருப்பவர்களுக்குத் தெரிவதேபோதுமென்று திருப்தியடைந்து தான் நல்வழியில் நடப்பதே புத்திமானுடைய கருமமாகும். இதை நான் உனக்கு இன்னும் விளக்கவேண்டியதில்லையப்பா" என்றார். அதைக் கேட்டு விஸ்வாமிதராய், நமது ஐயர் தாம் கண்ணல் கண்டகாக்ஷியைக் கவர்ந்துண்பவர்போல் அதிக ஆசையோடு பார்த்துப்பார்த்துத் தன் புத்தியிற் புதிதுபுதிதாய்த் தோன்றும் எண்ணங்களால் ஆனந்தித்துக்கொண்டிருக்கையில், விளக்குகள் ஒவ்வொன்றாய்த் தமது கண்ணுக்கு மறையவும், கையைப்பிடித்துக்கொண்டிருந்த சந்நியாசியைப்பார்க்க அவரும் கைக்ககப்படாமற்போகவே திடுக்கென்று ஐயர் இடம் விட்டுப்பெயரவும், தன்னுடைய வஸ்திரம் கைநழுவி விழுவதையும் திண்ணையில் பலர் உட்கார்ந்து பேசிக்கொண்டிருப்பதையும் கண்டார்.

இங்கு சொல்லப்பட்ட ஐயர் எனது அந்தரங்கமான இஷ்டர்களில் ஒருவர். பட்டணத்துக்குப்போய் விட்டுவந்ததுமுதல் வேறுமனிதராய்க் காணப்படுகிருர். கொஞ்சநாள்களுக்கு முன் பேசிக்கொண்டிருக்கையில், "ஐயா உமது தர்மகாரியங்கள் உமக்கு அதிகக்கியாதியைச் சம்பாதித்து வைத்திருக்கின்றன" என்று உபசாரமாய்ச்சொல்ல, அவர் "ஒருதரம் பட்டணத்துக்குப்போய்வாரும்" என்று மிகுந்த ஆப்திரத்தோடு கூறினர்.